# கல்கி

KALKI 5-12-1971 45 காசு












# அளியுங்கள் ஷார்க்கோஃபெர்ரால்

**இரண்டும் அதுவே! வைட்டமின்களும், உலோகத் தாதுக்களும், மால்டும் சேர்ந்த சக்திசெறிந்த கலவை.**

வளர்ச்சி, ஆரோக்கியம் இரண்டையும் அளிக்கச் சிறந்தது ஷார்க்கோ-ஃபெர்ரால். ஏனெனில் அது டானிக்காகவும், ஊட்டப்பொருளாகவும் விளங்குகிறது. வேறெந்த டானிக்கையும், ஊட்டப்பொருளையும் விட, கரண்டிக்குக் கரண்டி அதிக அளவிலே வைட்டமின் A, B, மற்றும் மூலாதார B காம்ப்ளெக்ஸ் சத்துக்களை வழங்குகிறது. இரும்புச் சத்து, கேல்ஷியம் ஆகிய முக்கியமான உலோகத் தாதுக்களையும் அளிக்கிறது. எனவே, ஏறக்குறைய 40 ஆண்டுகளாக டாக்டர்கள் ஷார்க்கோ-ஃபெர்ரால் ஆதரித்துக் கொடுப்பதில் வியப்பில்லை. தவிர ஜலதோஷம் மற்றும் இதர அன்றாடத் தொற்று நோய்களையும் தடுத்துக் காக்கும்.

1 கிலோ மற்றும் 450 கிராம் ஜாடிகளில் வருகிறது.

ஷார்க்கோ:ஃபெர்ரால் நம்பிக்கையின் சிகரமாய் இந்தியாவிலேயே உச்ச விற்பனை உடைய, மால்ட் அடிப்படை கொண்ட டானிக்!

Alembic

அலெம்பிக் கெமிக்கல் வொர்க்ஸ் கோ. லிட்.

தரமான மருந்துகளிலே நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்.

everest/206a/ACW TM




# கண்களுக் கெட்டாத சிறப்புகள் பல கொண்டது "ஸான்ஃபரைஸ்டு" சின்னம்

"ஸான்ஃபரைஸ்டு" சின்னம் சுருக்கத்திற்கு எதிரான பாதுகாப்பை உங்களுக்கு அளிக்கிறது. "ஸான்ஃபரைஸ்டு" முத்திரையிட்ட பருத்தி மற்றும் பருத்தி கலந்த துணிகளிலிருந்து தயாரிக்கப்படும் ஆடை அணிகள், எத்தனை தடவைகள் சலவை செய்தாலும் உருமாறுவதோ சுருங்குவதோ இல்லை.

"ஸான்ஃபரைஸ்டு" முத்திரையிட்ட துணிகள் நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு நல்ல மதிப்பைப் பெறுவதற்கு உத்தரவாதம். "ஸான்ஃபரைஸ்டு" கலை நுட்பப் பிரதிநிதிகளின் சுருக்கத்திற்கெதிரான கடும் சோதனைகளில் தேறியவை இத் துணிகள். இந்த டிரேடு மார்க்கின் உரிமையாளர்கள் விதித்துள்ள தராதரங்களுக்கு உட்பட்ட துணிகள் இவை என்று உறுதி செய்வதற்காக அவர்கள் சோதனை செய்கிறார்கள், அளவெடுக்கிறார்கள், அளவுகளை ஒத்திட்டுப் பார்க்கிறார்கள், புள்ளி விவரங்களை சோதிக்கிறார்கள், குறிப்பெடுத்து அனுப்புகிறார்கள்.




'சான்ஃபரைஸ்ட்' என்னும் டிரேட் மார்க்கின் உரிமையாளர்களான க்ளுயெட், பீபாடி அண்ட் கோ. இன்க். (யு.எஸ்.ஏ.வில் வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் இணைக்கப்பட்டது) வெளியிட்டது. சுருங்காத்தன்மையின் கடுமையான தேவைகளைப் பூர்த்தி செய்யும், பரிசீலிக்கப்பட்ட துணிகளுக்கு மட்டுமே உரிமையாளர்கள் இந்த டிரேட் மார்க்கை உபயோகிக்கின்றனர் அல்லது பதிவு செய்யப்பட்ட உபயோகிப்பாளர்களை உபயோகிக்க அனுமதிக்கின்றனர்.

mca SAN.728 TAM. )

# கல்கி

பொருளடக்கம்



விரோதிகிருது, கார்த்திகை 19 :: டிசம்பர் 5, 1971






| சந்தா விவரம்: | ஒரு வருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 23-00 | ரூ. 11-50 |




# தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனம் லிமிடெட்

(தமிழ்நாடு அரசுக்கு உரியது)
150-A, அண்ணா சாலை, மத்திய நூலகக் கட்டடம், சென்னை-2.
(நிறுவனத்தின் நெறியாளர் குழுவினரால் [illegible] ஏற்கப்பெற்ற விளம்பரத்தின் வாசகம்)

நிறுவப் பெற்ற தேதி : 21-6-1965
பதிவுத் தலைமை அலுவலகம் : மத்திய நூலகக் கட்டடம், 150-A, அண்ணா சாலை, சென்னை-2.

பொது மக்கள் மற்றும் இதர நிறுவனங்களிலிருந்து ஆயிரம் ரூபாயோ அல்லது அதற்கு மேற்பட்டு (ஆயிரக் கணக்கில்) செலுத்தப்படும் டிபாசிட் தொகைகளை இத் தொழில் நிறுவனம் கீழ்க்கண்ட வருடாந்திர வட்டி விகிதங்களில் ஏற்றுக் கொள்ளும்.

| | | | |
|---|---|---|---|
| ஓர் ஆண்டும் அதற்கு மேலும் ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குள் | 9% | இரண்டு ஆண்டுகளுக்கும், அதற்கு மேலும் | $9\frac{1}{2}$% |

**மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வட்டி கொடுக்கப்படும்**

## நெறியாளர்கள் குழு:

திரு. வி. கார்த்திகேயன், ஐ.ஏ.எஸ்.,
சிறப்புச் செயலாளர்
தொழில்துறை,
தமிழ்நாடு அரசு — தலைவர்

திரு. எஸ். வெங்கிட்டரமணன், ஐ.ஏ.எஸ்.,
செயலாளர்
நிதித்துறை,
தமிழ்நாடு அரசு — நெறியாளர்

திரு. ஆர். நடராசன், ஐ.ஏ.எஸ்.,
சிறப்புச் செயலாளர்,
பொதுப் பணித்துறை,
தமிழ்நாடு அரசு — நெறியாளர்

திரு. ஏ. பத்மநாபன், ஐ.ஏ.எஸ்.,
தலைவர் & நிர்வாக இயக்குநர்,
தமிழ்நாடு சிறு தொழிற் வளர்ச்சி
நிறுவனம், சென்னை.
— நெறியாளர்

திரு. சி. என். ராகவன், ஐ.ஏ.எஸ்.,
நெறியாளர்
தொழில்-வணிகத்துறை,
சென்னை.
— நெறியாளர்

திரு. பி. சிவலிங்கம், பி.இ., (ஆனர்ஸ்)
தொழில் நுட்பக் கல்வி நெறியாளர்,
சென்னை.
— நெறியாளர்

திரு. ஜி. துவாரகாநாதன், ஐ.ஏ., & ஏ.எஸ்.,
— நெறியாளர் (நிதி)

திரு. டி. எஸ். விஜயராகவன், ஐ.ஏ.எஸ்.,
— நிர்வாக இயக்குனர்

கம்பெனி மேற்கொண்டுள்ள அலுவல்கள்:

(A) தமிழக அரசுக்கு சொந்தமான தொழிற்கூடங்களை நிர்வகித்தல்
தமிழ்நாடு சிமெண்ட்ஸ், ஆலங்குளம்.
எஃகு தொடர்பு வார்ப்பு ஆலை, அரக்கோணம்.

(B) கூட்டுத் துறையில் தொழில்களை துவங்க ஊக்குவித்தல்.
தூத்துக்குடி உர ஆலை, ஹைட்ரோ சல்பைட் ஆலை,
ஆட்டோமொபைல் டயர் & டியூபுகள், சிகரெட்டுகள் முதலியன.

தமிழ்நாடு சிமெண்ட் தொழிற்சாலை 5-2-70ல் உற்பத்தியை துவக்கியுள்ளது. இந்தத் தேதிக்கு முன் செய்யப்பட்ட செலவுகள் எல்லாம் மூலதனத்தோடும், தொழிற்சாலை கட்டுமானச் செலவுகளுடனும் சேர்க்கப்பட்டுள்ளன.

1970—71ல் நஷ்டம்: ரூ. 78,80,009
அறிவிக்கப்பட்ட பங்கு வீதம்: ஒன்றுமில்லை

| | | (லட்சத்தில்) |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் (31—3—71ல் உள்ளபடி) | | ரூ. 686.74 |
| அரசு வழங்கிய கடன் | ,, | ரூ. 444.88 |
| ரிசர்வ் தொகை | ,, | ரூ. Nil |
| கடன் பத்திரங்கள் மூலம் (Debentures) | ,, | ரூ. 75.00 |
| ரொக்க கடன் | ,, | ரூ. 75.00 |
| அதிகப்பற்று (Overdraft) | ,, | ரூ. Nil |

விண்ணப்ப படிவங்களுக்கும் விதிமுறைகளுக்கும், தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனத் தாருக்கு (டிபாசிட் பிரிவு), 150-A, அண்ணா சாலை, சென்னை 2-க்கு எழுதிக் கேட்கவும்.



தமிழ்த்திரு நாடுதன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# பூசல் முற்றுகிறது!

இவ்விதழ் அச்சேறும் தருணத்தில் இந்தியா — பாகிஸ்தான் எல்லை மோதல்கள் பற்றி வந்துள்ள செய்திகள் பயங்கரமாக உள்ளன. பூசல் முற்றி உயிர்ச் சேதமும் ஓரளவுக்கு நடந்திருக்கிறது. எல்லைப் பாதுகாப்புப் படையினர் எல்லையைக் கடந்து சென்றும் தற்காப்பின் நிமித்தம் அவசியமான நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்று இந்திய சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறது. இதை வைத்துக்கொண்டு இந்தியாதான் இச் சர்ச்சையை அசல் யுத்தமாக வளர்த்து விட்டது என்று கதைத்துத் தப்பர்த்தம் கற்பிக்கப் பாகிஸ்தானுக்கு இடமேற்படலாம். இவ்வாறு கூறி, மேற்கத்திய வல்லரசுகளிடமிருந்து சக்திகரமான 'தார்மிக' ஆதரவைத் தூண்டிப் பெறுவதற்குப் பாகிஸ்தான் முயலக்கூடும்; பாகிஸ்தானின் ராணுவ நடவடிக்கைகளில் சீனத்தின் பங்கை அதிகமாக்குவதற்கும் இப்போது பாகிஸ்தான் அந்த நாட்டை வற்புறுத்தக் கூடும்.

இந்திய சர்க்கார் அதிகபட்சமான கட்டுப்பாட்டுடன் நடக்க வேண்டிய தருணம் இது. இந்தியாவை வெளி உலகம் தப்பாகப் புரிந்துகொள்ள இடமேற்படாமல், கூர்ந்த கவனத்துடன், ராஜரீக நடவடிக்கைகளை உருவாக்க வேண்டிய சமயம் இது.

* * *

இந்தியா — பாகிஸ்தான் நிலவரம் மோசமாகி விடாதபடி, பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று பாகிஸ்தான் பிரிட்டனைக் கேட்டுக் கொண்டிருக்கிறது! ஆனால் மூலமான பிரச்னை இந்தியா — பாகிஸ்தான் விவகாரம் அல்லவே! மூலப் பிரச்னை கிழக்கு வங்க விவகாரமே ஆகும். அதிலிருந்து கிளைத்ததுதான் இப்போதைய இந்தியா — பாகிஸ்தான் சர்ச்சை. ஜனாதிபதி யாஹ்யாகானுக்கும் கிழக்கு வங்கத் தலைவர்கள், அப்பகுதி மக்கள் ஆகியோருக்குமிடையில் ஏற்பட்டுள்ள மோதலுக்குத் தீர்வு கண்டால் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடும். எனவே அதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும். இதுவரையில் இவ்விஷயத்தில் வல்லரசுகள் யாஹ்யாகானுக்கு ஆதரவாகவே இருந்து வந்திருக்கின்றன. அந்த ஆதரவை மாற்றிக் கொள்வதற்கு அவை இன்னும் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ளாமலே இருந்து வருகின்றன.

இந்த நிலையில் யாஹ்யாகான் பாகிஸ்தானில் நெருக்கடி நிலைமை பிரகடனம் செய்திருக்கிறார். உண்மையில் இது அவரது சொந்த நெருக்கடியைத்தான் வெளிக்காட்டுகிறது. கடந்த சில வாரங்களாக அவர், ஒருபுறத்தில் தமது கொலைகாரப் பட்டாளத்தை வங்காள தேசத்தில் தூண்டிவிட்டு, இந்தியாவுக்கு வெளியேறும் அகதிகளின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே வந்திருக்கிறார். மறுபுறத்திலோ, தம்மிடமே நியாயம் இருப்பது போல வெளி உலகுக்குக் காட்டிக் கொண்டு இனிக்க இனிக்கப் பேசி வந்திருக்கிறார். இந்த இரட்டை வேடத்தைச் சாதுரியமாகச் செய்து வருகிறார்.

* * *

இதனிடையில் நமது பிரதமர் மேற்கத்திய நாடுகளில் சஞ்சாரம் செய்துவிட்டுத் திரும்பியிருக்கிறார். இதுகாரணமாக மேற்கத்திய வல்லரசுகள், இந்தச் சர்ச்சையின் அடிப்படை உண்மைகளையும், நமது தரப்பின் நியாயத்தையும் உணர்ந்திருக்கக்கூடும் என்பது சிலரது நம்பிக்கை. அப்படியே அவை **உணர்ந்தாலும்** கூட, காரியத்திலே அவை என்ன **செய்யப் போகின்றன** என்பதுதான் முக்கியம். உண்மை விளக்கம் கிடைத்துவிட்டதால், அதற்கேற்பவே நடந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. இன்னமும்கூட, பாகிஸ்தானைவிட இந்தியாவுக்கு மேற்கு வல்லரசுகள் சாதகமாக இருப்பதாக நினைக்கக்கூடிய ரீதியில் அவை நடந்துகொள்ளவில்லை. தனக்கு எதிராகவும், இந்தியாவுக்கு ஆதரவாகவும் மேற்கு வல்லலரசுகள் மாறிவருகின்றன என்று பாகிஸ்தான் எண்ணும்படியாக எதையுமே செய்ய அந்த வல்லரசுகள் விரும்பவில்லை.

(அடிப்படை ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

## ஏனோ அதிர்ச்சி?

பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரத்தில் இந்தியா தலையிட்டதாகச் சீனம் ஐ. நா.வில் கூறியது இந்தியாவுக்கு ''அதிர்ச்சி''யூட்டி யிருப்பதாகப் பத்திரிகைத் தலைப்புக்கள் கூறு கின்றன. இது எனக்கு வேடிக்கையாக உள்ளது. சீனத்திடமிருந்து வேறென்ன எதிர் பார்க்க முடியும்? இதில் அதிர்ச்சி கொள்ள என்ன இருக்கிறது? நமக்குச் சாதகமாகச் சீனம் பேசும் என்று எதிர்பார்த்திருந்தால் அது நம் தப்புத்தான். இந்தியா அவதிப்பட வேண்டும் என்பதுதான் சீனத்தின் விருப்பம். அதற்காகவே யாஹ்யா கானுக்கு உதவி தந்திருக்கிறது. இந்த எண்ணத்தை அது மாற்றிக் கொள்ளவே இல்லை. கண்டம் முழு வதிலும் தனது யதேச்சாதிகாரத்தை நிலை நாட்டிவிட வேண்டும் என்பதே சீனத்தின் இறுதி நோக்கம். இதை உணர்ந்தவர்கள் ''அதிர்ச்சி'' அடைய மாட்டார்கள்.

ஆசிய விவகாரங்களிலிருந்து ஒதுங்கியிருக்க முடிவு செய்தது அமெரிக்கா. இப்போது அது போதாதென்று சீனத்தில் தன் சரக்குகளுக்குச் சந்தை பிடிப்பதற்காகத் தோழமை கொண் டிருக்கிறது. இதனால் ஜனநாயக ஆசியாவுக்குச் சீனத்தினால் ஏற்படக்கூடிய ஆபத்து உக்கிர நிலையை அடைந்து விட்டது.

## காங்கிரஸின் பெயர்

ஸ்தாபன காங்கிரஸ் தனக்கு வேறு பெயர் சூட்டிக் கொள்ள வேண்டும் என்று தேர்தல் கமிஷனர் யோசனை கூறியுள்ளார். ஸ்தாபன காங்கிரஸ் அவசியம் செய்ய வேண் டியது பெயர் மாற்றம் அல்ல; கொள்கை மாற்றமேயாகும். பழைய கொள்கைகளைக் கடைப்பிடிப்பது 'பழைய காங்கிரஸ்' என் றும், புதுக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பது 'புது காங்கிரஸ்' என்றும் சொல்வது பொருத்தமா யிருக்கும். அரசியல் சாஸனத் தைத் தகர்க்கும் காரியத்தை விட்டு, அதைக் காக்க முற்படுவதே 'பழைய' காங்கிரஸ் செய்ய வேண்டியது. இதை ஸ்தாபன காங்கி ரஸ் செய்யுமாயின் அப்போதுதான் ''பழைய காங்கிரஸ்'' என்று பெயர் வைத்துக் கொள் வது பொருந்தும்.

## பசுவும் கன்றும்

எந்த ஓர் அரசியல் கட்சியும் பசு-கன்று சின்னத்தை உபயோகிக்க அனுமதித்திருக்கக் கூடாது. 'கோமாதா' என்பதாகப் பசு வானது தேசம் முழுவதிலும் ஹிந்துக்களால் வழிபடப் பெறுவதால், இதனை ஓர் அரசியல் கட்சியின் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன் செய்வதை அனுமதிக்கக் கூடாது. மதப் பித்துச் சிறிதும் அற்ற காந்திஜியே ஹிந்து மதத்தில் கோபூஜை ஒரு முக்கியமான அம்சம் என்று எழுதியுள்ளார். மதச் சார்பு இன்றி உண்மையை உள்ளபடி விசாரணை செய்தே அவர் இவ்வாறு எழுதியிருக்கிறார். நடந்து போன தேர்தலில் இந்தத் தவறு அனுமதிக்கப் பட்டது என்பதை ஒரு காரணமாகக் காட்டி இந்த மகத்தான முறையின்மையை நீடிக்க விடுவது சரியல்ல. இந்தச் சின்னத்துக்கு ஆதர வாக ஹிந்துக்களின் சமய உணர்ச்சி இருக்கு மாதலால் பெருவாரியான வோட் கிடைக் கும் என்றேதான் ஆள்கிற காங்கிரஸ் இந்தச் சின்னத்தை விடாமல் பிடித்துக் கொண் டிருக்கிறது.

## உச்சவரம்பு வியாதி

அரசியலையே [தொழிலாகக் கொண் டிருப்பவர்களும், பிரதமரின்; மீது மிகுந்த செல்வாக்கு கொண்டவர்களுமான இள வய துக்காரர்களுக்கு 'உச்சவரம்பு' வியாதி கண்டிருக்கிறது. நகரச் சொத்து, கிராமச் சொத்து அனைத்துக்கும் வரம்பு விதித்து, ஏழைகளைப் பணக்காரர்களாக்கி விடலாம் என்று அவர்கள். கூறுகிறார்கள். ஒன்றும் தெரியாத கூட்டத்துக்குத் தலைவர்களாகத் திகழவேண்டும் என்ற 'பசி'யில் இப்படிப் பேசுகிறார்கள்.

உச்சவரம்பு விதித்துப் பெரிய பண்ணை களைப் பல துண்டுகளாகச் சிதைத்து விட்டால் அந்தச் சிறிய துண்டுகளில் நவீன இயந்திரம்

---

### செகந்திராபாத் – ஸ்கந்தகிரி திருப்பணி

செகந்திராபாத் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து அரை மைல் தூரத்தில் உள்ளது ஸ்கந்தகிரி. குன்றுதோறும் குமரனுக்கு அந்தக் குன்றில் ஓர் அழகிய திருக்கோயில் உருவாகியுள்ளது.

18–5–1968 அன்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமி களின் திருக்கரங்களால் சங்கு ஸ்தாபனம் செய்யப்பட்டு, சுந்தர விநாயகர் சந்நிதியும், சுப்பிரமணிய ஸ்வாமி சந்நிதியும் பூர்த்தியாகி விட்டன. விநாயகர் ஆலயத்துக்கு 26–8–1968 அன்று ஆச்சாரிய ஸ்வாமிகளே கும்பாபிஷேகம் நடத்தி அருளினார்கள். கந்தப் பெருமானின் கோயில் கும்பாபிஷேகம் சென்ற ஆண்டு நிறைவேறியது.

தனயர்களுக்கு ஆலயம் அமைந்த பின், தாய் தந்தையரான அம்பாளுக்கும் சிவனுக்கும் சந்நிதிகள் எழுப்பும் பணி நடைபெற்று வருகிறது. பணி பூர்த்திபெற ரூபாய் இருபத்தி ஐயாயிரம் தேவைப்படுகிறது. வரும் தை மாதத்தில் கும்பாபி ஷேகம் நடைபெற வேண்டும் என்று பெரியவாள் திருஉளம் பற்றி முடிவாகியுள்ளது.

அன்பர்கள் பெருமளவில் நிதி உதவி, ஆலயப் பணி நிறைவுறச் செய்யவேண்டும். நிதி அனுப்ப வேண்டிய விலாசம்: ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி ஆடிக்கிருத்திகை லட்சார்ச் சனைக் கமிட்டி (ரிஜிஸ்டர்ட்), 3-1, கிழக்கு மாரட்பள்ளி, செகந்திராபாத்–26.

# ராஜாஜி 93 – சிறப்பு மலர் (ஆங்கிலம்)

இந்தியாவிலிருந்து மட்டுமின்றி அயல் நாடுகளிலிருந்தும் முக்கியஸ்தர்களும் அறிஞர்களும் ராஜாஜி அவர்களுக்கு இம் மலரில் பாராட்டுரைகள் வழங்குகிறார்கள்; அவருடன் தொடர்பு கொண்டதால் ஏற்பட்ட அநுபவங்களை நினைவுகூர்கிறார்கள்.

ராஜாஜியின் ஒப்புவமையில்லாத நீண்ட வாழ்வில் நிகழ்ந்துள்ள பல சம்பவங்கள் குறித்து ஏராளமான புகைப்படங்கள் இடம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு மலருடனும் ராஜாஜியின் குரல் பதிவாகியுள்ள ஒரு 45 R.P.M. ரிகார்டும் இலவசமாக வழங்கப்படுகிறது.






ரிகார்டின் ஒருபுறத்தில் "பயபக்தி உள்ள வாழ்க்கை" என்பது பற்றியும் மறுபுறத்தில் "உலகம் முழுதும் ஒரு குடையின்கீழ்" என்பது பற்றியும் ராஜாஜி ஆங்கிலத்தில் பேசுகிறார்.

உயர்தரமான முறையில் உருவான மாபெரும் மலர். கல்கி பத்திரிகையை விட இரு மடங்கு பெரிய அளவில் முந்நூறு பக்கங்களுக்கு மேல் கொண்டது இந்த மலர். இருநூறுக்கும் அதிகமான கட்டுரைகளும், வாழ்த்துரைகளும் (அனைத்தும் ஆங்கிலத்தில்) இம் மலரில் இடம் பெற்றுள்ளன. இந்த மலரின் விலை ரூ. 12.00. ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பச் செலவு ரூ. 1.50.

சொற்பப் பிரதிகளே அச்சாகின்றன. முன்பணம் அனுப்பிப் பதிவு செய்து கொள்கிறவர்களுக்கு வரிசைக்கிரமப்படி பிரதிகள் ஒதுக்கி வைக்கப்படுகின்றன. இந்தியாவில் உள்ளோர் ரூ. 13.50ம் அயல்நாடுகளில் வசிப்போர் கப்பல் தபாலில் மலரைப் பெற ரூ. 25ம் முன் பணம் அனுப்ப வேண்டும்.

கல்கி வாசகர்கள் ராஜாஜி 93 மலரை இலவசமாகப் பெறவும் ஒரு திட்டம் வகுத்திருக்கிறோம்.

நமது வாசகர்கள் ரூ. 46.00 அனுப்பி வைத்தால் இரண்டு ஆண்டுகளுக்குக் கல்கியும், 1972 தீபாவளி மலர்ப் பிரதியும் பெறுவதுடன் ராஜாஜி 93 சிறப்பு மலரையும் அவரது குரல் பதிவாகியுள்ள ரிகார்டுடன் இலவசமாகப் பெறலாம்.

கல்கி பத்திரிகையின் நூற்றுக் கணக்கான வாசகர்களின் கோரிக்கைக்கு இணங்க, இந்த விசேஷச் சலுகைகள் பூஜ்ய ராஜாஜி தமது 93வது வயதைப் பூர்த்திசெய்யும் 1971 டிசம்பர் மாதம் இறுதிவரை கல்கி வாசகர்களுக்கு நீடிக்கப்பட்டிருக்கிறது.



சதாசிவம்

அமைப்பாளர், ராஜாஜி 93 சிறப்பு மலர்க் குழு.
கல்கி காரியாலயம், சேத்துப்பட்டு, சென்னை – 31.




கொண்டு உற்பத்தியைப் பெருக்க எவரும் பெரிய முதல் போட மாட்டார்கள். ஏழை உழவர்களுக்கு நிலத்தில் பயிர்த் தொழில் நடத்தப் போதிய முதலே இராது. ஆகவே ஏழை உழவர்களுக்கு நில விநியோகம் செய்வது உற்பத்திப் பெருக்குக்கு உதவவே உதவாது. உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு இவ்விதம் இடையூறு செய்யும் உச்சவரம்புக் கொள்கை பொது நலத்துக்கு ஊறு விளைவிக்கும். நிலத்தை தானம் பெற்ற ஏழை உழவர்கள் அவற்றைச் சட்ட விரோதமாகவும், மறைமுகமாகவும் வசதியுள்ளவர் கைக்கு மாற்றுவர். இந்தத் தவறான நடவடிக்கை மிகப் பெருமளவில் நடக்கும். ஏழை உழவர்கள் நிலங்களை நிருவகிப்பதற்காக அவர்களுக்கு ராஜ்ய சர்க்கார்கள் நேரடியாகவோ, அரசுடைமையாக்கப்பட்ட பாங்குகள், அல்லது கூட்டுறவு சங்கங்கள் மூலமோ ஏராளமான நிதியம் கடன் தர வேண்டியதாகும். இதுகாறும் நிம்மதியுடனும் மகிழ்ச்சியுடனும் தொழிலாளிகளாக நிலத்தில் உழைத்தவர்கள், அதை நிருவகிக்கத் தெரியாமல் அவதிப்படுவார்கள்; கால்நடை, உரம் இவற்றுக்காக வாங்கிய கடன்களைத் திருப்பித் தருவதற்கு அவஸ்தைப்படுவார்கள். கடைசியில் சர்க்கார், தான் கொடுத்த கடன் தொகையைத் திருப்பித் தர வேண்டியதில்லை என ரத்து செய்ய வேண்டியதாகும். அதாவது, இன்று சரியாக நடந்து வரும் விவசாயத்தில் அநாவசிய மாறுதலைச் செய்வதற்காகப் பொதுப் பணம் ஏராளமாக வீணாக்கப்படும். அப்போதும் தங்கள் கொள்கை தவறு என்று காட்டிக் கொள்ளாமல், அதை மூடி மறைக்கவும், தங்களது 'தலைமை' நழுவாமல் பாதுகாத்துக் கொள்வதற்கும் மேலும் பல தவறான கொள்கைகளை மேற்கொள்வார்கள்!

## அச்சம் வேண்டாம்!

விவசாயமும் இதர தொழிலும் செய்கிறவர்கள் வெற்றிகரமாகத் தங்கள் தொழிலைச் செய்தால் செல்வம் கிடைக்கிறது. ஆனால் உடனேயே அவர்களுக்கு அரசியல் அதிகாரம் படைத்தவர்களிடம் அச்சம் ஏற்பட்டுப் பலவீனர்களாகிவிடுகின்றனர். எவ்வித மன உறுத்தலுமின்றி அரசியல் அதிகாரத்தைச் சொந்த அநுகூலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் போக்கு ஏற்பட்டிருப்பதால் தொழிலில் வெற்றி காண்பவர்கள் இவ்விதம் அஞ்சுகிற நிலை உண்டாகி யிருக்கிறது.

அச்சமின்மை என்ற பொன்தான் உண்மையான செல்வம். மற்றச் செல்வங்களும், சொத்துக்களும் வெறும் சில்லறை விஷயங்களேயாகும். நம் அனைவருக்குள்ளும் அமரமான ஓர் ஆன்மா இருக்கிறது. இந்தப் பூமியிலுள்ள எவராலும் அதற்குத் தீங்கு செய்ய முடியாது என்று உணர்ந்தோமாயின் எவருக்கும் அஞ்சமாட்டோம். காந்திஜி எப்போதும் இந்த அபய நிலையைத்தான் ஓதி வந்தார். அவர் சொந்த வாழ்வில் பரிபூரண அஞ்சா நெஞ்சராக இருந்தார். அதுவே அவரது சக்திக்கு மூலமாக இருந்தது.

பெண்மை—
மனங்கவரும்,
மதிமயக்கும்.
துள்ளு
நடைபோடும்
ஒருகணம்,
துவண்டு தடுமாறும்
மறுகணம்.
பெண்மையின்
பல எண்ணங்களின்
குவியலே
‘மெ:.ப்ரின்’




# மெ:.ப்ரின்

‘மெ:.பரின்’ ஒயில் அணிந்த
மங்கையர் புதியதோர்
கோலம் படைத்துள்ளனர்!

‘மெ:.பரின்’ பாலியெஸ்டர்
இழைகலந்த உடுப்புத்
துணிகள்—கேம்பிரிக்குகள்,
லான்கள், பாபுளின்கள்;
இளம் சாயல்களில்,
எடுப்பான வண்ணங்களில்,
பெருமிதப் பிரிண்டுகளில்
‘மெ:.பரின்’ 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சேலைகள்.

தவிர, அதி நவீனமான அரும்பெரும்
அழகு வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும்,
‘டெரோஸெல்’ பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்; இன்னும்
மிளிரும் வண்ணங்களிலே,
கட்டங்களிலே, டிசைன்களிலே
‘எடெரகாட்’ பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**

AIYARS-M.317 TM

பலவிதமான கர்மானுஷ்டானங்களை நான் சொல்கிறேன். இந்தக் கர்மங்கள், பரமேச்வர பூஜை, பரோபகாரம் எல்லாம் பிறருக்காகச் செய்யப்படுவதாகத் தோன்றினாலும் உண்மையில் தங்களுக்கே செய்து கொள்வதுதான். பிறருக்கு உபகாரம் செய்வதால், சேவை செய்வதால், அல்லது ஸ்வாமிக்குப் பூஜை செய்வதால் அவனவனுக்கும் உள்ளுக்குள்ளே ஒரு நிறைவு ஏற்படுகிறது. நாம் செய்கிற சேவையில் மற்றவர்களுக்கு உண்மையான லாபம் இருந்தாலும் இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். நம் சேவை அவர்களுக்குத் தேவைப்படாமலும் இருக்கலாம். ஆனால் அதைச் செய்யும்போது நமக்கே திருப்தியும் சந்துஷ்டியும் அமைதியும் உண்டாகின்றன. 'பரோபகாரம்' என்று சொன்னாலும் கூட அது பர (பிறருக்கு) உபகாரமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், தனக்கே உபகாரமாக இருக்கிறது.

பிறருக்குச் சேவை செய்வதற்காக நாம் எத்தனையோ கஷ்டங்கள், தியாகங்கள், சரீர சிரமம் எல்லாம் அடைந்தாலும் இதற்கெல்லாம் மேலாக அதிலேயே ஒரு நிறைவை, சந்துஷ்டியை நமக்குள் ஏதோ ஒன்று அநுபவித்துக்கொண்டிருக்கிறது.

பத்தினியிடமும், பிள்ளையிடமும், மற்றவர்களிடமும் நாம் வைக்கிற பிரியத்துக்கெல்லாம் உண்மையில் நம்மிடமே உள்ள பிரியம்தான் காரணம்; நம் உள்ள நிறைவுக்காகத்தான் மற்றவரிடம் பிரியம் காட்டுகிறோம் என்பது யாக்ஞவல்கியரின் உபநிஷத உபதேசம். பகவானிடம் பிரியம் வைத்து நாம் பூஜை செய்தாலும் சரி, உலகத்திடம் பிரியம் வைத்துச் சமூக சேவை செய்தாலும் சரி, அதெல்லாம் கூடத் தனக்கு ஒரு நிறைவை உண்டாக்கிக் கொள்வதற்காக, நம்மிடமே நமக்குள்ள பிரியத்தால் செய்வதுதான். இந்த நிறைவை அடைவதற்காக, வெளியிலே எத்தனை கஷ்டம் வந்தாலும், துக்கம் ஏற்பட்டாலும், தியாகங்கள் செய்ய வேண்டியிருந்தாலும் நாம் பொருட்படுத்துவதில்லை.

நேரடியாக நமக்கே நல்லது செய்து கொள்ள வேண்டும் என்று பணத்தையும், இந்திரிய சுகங்களையும் தேடிப் போனால் இந்த உள் நிறைவு உண்டாக மாட்டேன் என்கிறது. மாறாக சுய காரியங்கள் நிம்மதியின்மையிலும் துக்கத்திலுமே கொண்டு விடுகின்றன. கண்ணாடியில் நமது முகத்தைப் பார்க்கிறோம். அதன் நெற்றியில் பொட்டில்லை என்று தெரிகிறது. உடனே கண்ணாடிக்குச் சாந்து இட்டால் என்ன ஆகும்? கண்ணாடி கறுப்பாகும். பிம்பத்துக்குப் பொட்டு வைப்பது என்றால் பிம்பத்தின் மூலமான மனிதனுக்குத்தான் பொட்டு வைத்துக் கொள்ள வேண்டும்.



'எனக்கு' என்று நினைத்துச் செய்யும் காரியங்கள் உண்மையில் நம் மனசுக்குக் கரிப் பொட்டு வைப்பதாகவே — நமக்கு நாமே கரியைப் பூசிக் கொள்வதாகவே — முடிகிறது. மனசு என்கிற மாயக் கண்ணாடியில் பிரதிபலிக்கிற பரமாத்ம பிம்பத்தையே 'நான்' என்று நினைக்கிறோம். அந்தப் பிம்பத்துக்கு அழகு செய்வது என்றால் உண்மையில் பரமாத்மாவுக்கு அழகு செய்ய வேண்டும். அம்பாளுக்குச் செய்கிற அலங்காரம்தான் நமக்கு அழகு. நமக்கே செய்துகொள்ளுகிற அலங்காரம் அகங்காரத்துக்குத்தான் வழி காட்டும். இதை மற்றவர்களும் ரசிப்பதில்லை. அம்பாளை அலங்கரித்தால் அதைப் பார்த்து எல்லோரும் சந்தோஷிக்கிறார்கள். பிரமாதமாகச் சலவை செய்த துப்பட்டாவை நாமே போட்டுக் கொண்டு பெருமைப்படுகிறோம். மற்றவர்கள் அதைப் பார்த்துச் சந்தோஷமா படுகிறார்கள்? ''இஸ்திரி எப்படி ஏறியிருக்கிறது, பார்த்தாயா?'' என்றுதான் அவர்கள் கேலியாகக் கேட்டுக் கொள்வார்கள்.

நமக்கு நல்லது செய்வதாக நினைத்துப் பணமும், புகழும், இந்திரிய சுகங்களும் தேடிப் போவது மனசில் கரியை ஏற்றுகிற காரியம்தான். பரமாத்ம ஸ்வரூபமான உலகுக்குச் செய்கிற நல்லதேதான் உண்மையில் நமக்கும் நல்லது; ஆத்ம க்ஷேமம் அதுவே. இதை நம்முடைய உள் மனசே அறிந்திருக்கிறது. அதனால்தான் தனக்கென்று செய்து கொள்கிற சௌகரியங்களில் கூட ஏற்படாத நிறைவு, பிறருக்காக அசௌகரியப்படும்போது ஏற்படுகிறது!

உலகம் பரமாத்ம ஸ்வரூபம் என்றால், நாமும் அதே பரமாத்ம ஸ்வரூபம்தான். மனசு என்கிற கண்ணாடியை எடுத்துவிட்டு, அந்த பரமாத்ம ஸ்வரூபமே நாம் என்பதை அநுபவித்துப் பார்க்க வேண்டும். இதுதான் தியானம் என்பது. நாம் செய்கிற இத்தனை காரியங்களும், கடைசியில் ஒரு காரியமுமில்லாத அந்த ஆத்ம தியானத்தில்தான் நம்மைச் சேர்க்க வேண்டும்.

காரியங்களில் நமக்குப் பலவிதமான சந்தோஷங்கள் உண்டானாலும் காரியமில்லாத தூக்கத்திலிருக்கிற பெரிய சாந்தி அவற்றில் இல்லை. ஒரு நாள் தூங்காவிட்டால் எவ்வளவு கஷ்டப்படுகிறோம்? தூக்கத்தில் அப்படிப்பட்ட சௌக்கியம் இருக்கிறது! இதிலிருந்தே காரியம் இல்லாமலிருப்பதுதான் பரம சௌக்கியம் என்று தெரிகிறது. அப்படிக் காரியமே இல்லாமல் நன் உண்மை நிலையான பரமாத்ம ஸ்வரூபத்தை நினைப்பதுதான் தியானம்.

தூக்கத்திலே 'நாம் சௌக்கியமாயிருக்கிறோம்' என்றும் தெரியவில்லை. தூக்கம் கலைந்த பின்தான் தூக்கத்திலே சுகமாயிருந்திருப்பதாகத் தெரிகிறது. இப்படியின்றி, பேரானந்தமாக இருக்கிறோம் என்ற பிரக்ஞையுடன் சாந்தமாக இருப்பதுதான் தியானம்.

உள்ளுக்குள்ளே அப்படிக் காரியமே இல்லாமல் இருக்கப் பழக்கிக் கொண்டு விட்டால் பிறகு வெளியில் எத்தனை காரியம் செய்தாலும்கூட ஆத்ம சாந்த அநுபவம் குலையாது.

தக்ஷிணாமூர்த்தியின் சாந்தம், பூரண பிரக்ஞை கொண்ட ஆனந்த நிலை. அது தூங்கும்போது மனம் அடங்குவது போன்றதல்ல. தூக்கத்தில் மனத்தை நாம் ஸ்வாதீனமாக அடக்கவில்லை. அதுவே களைத்துப்போய் அடங்குகிறது. இப்படிப்பட்ட அடக்கத்தை நாம் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு காக்க முடியாது. தூங்கும்போது நம் ஸ்வாதீனத்தில் இல்லாமலே அடங்குபவை எல்லாம் மறுபடியும் நாம் விழிக்கும்பொழுது நம் ஸ்வாதீனமில்லாமலே திரும்பி வந்து விடுகின்றன.

சாவு என்பதும் ஒருவகைத் தூக்கம்தான். அப்போதும் மனசு அடங்குகிறது. ஆனால் மறு பிறவியில் தேகம் வந்தவுடன் இந்த மனசு மீண்டும் அதற்குள்ளிருந்து வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. எனவே ஸ்வாதீனமாக மனசை அடக்கினாலே அதை அடங்கிய நிலையிலும் நாம் நீடித்து வைத்துக் காக்க முடியும். தக்ஷிணாமூர்த்தி காரியம் இல்லாமல் இருந்தாலும், முழு பிரக்ஞையுடன் அப்படி இருக்கிறார். உள்ளுக்குள் காரியம் இல்லாததாலேயே வெளியிலே அவரால் எத்தனையோ காரியம் செய்ய முடிகிறது. வெறுமே உட்கார்ந்திருக்கும் தக்ஷிணாமூர்த்திதான் ஆனந்த தாண்டவக் கூத்தும் ஆடுகிறார். திரிபுர தகனம்செய்கிறார். பிக்ஷாடனம் பண்ணுகிறார். பக்தர்களுக்கு வரம் கொடுத்து விட்டு ஊர் ஊராகத் திண்டாடுகிறார். உள்ளே அடக்கமாக இருக்கிறார். வெளியிலே கூத்தடிக்கிறார். நமக்கும் உள்ளே அடக்கம் வந்துவிட்டால் வெளியிலே எத்தனை காரியமும் செய்யலாம்.

தக்ஷிணாமூர்த்திக்கு நேர் எதிராக நாம் இருக்கிறோம். நம்மை எல்லோரும் பற்றே இல்லாமல் சாந்தியுடன் இருப்பதாக நினைக்க வேண்டும் என்று வெளியிலே வேஷம் போடுகிறோம். உள்ளுக்குள்ளே ஓயாமல் சஞ்சலித்து ஆட்டம் போட்டுக் கொண்டேயிருக்கிறோம்.

முதலில் வெளி அடக்கம் உண்டானால்தான் உள்ளடக்கம் சித்திக்கும். இதனால்தான், ''இந்திரிய வியாபாரங்களைக் குறைத்துக்கொள்; கூட்டத்தில் சேராதே; 'உலகுக்கு நல்லது செய்வது' என்பது உள்படச் சகல காரியங்களையும் விலக்கப் பிரயாசைப்படு; பணத்தைப் பக்கத்தில் சேர்க்காதே; காட்டுக்குப் போ'' என்றெல்லாம் சொன்னார்கள். ஆரம்பத்தில் இப்படி வியாபாரம் எல்லாவற்றையும் குறைத்துக் கொண்டு, ஆத்ம தியானத்தில் ஈடுபட்டால் உள் அடக்கம் சித்திக்கும். அதன் பின் லோக சங்கிரஹம் (உலகுக்கு நன்மை செய்வது) என்பதற்காக எத்தனை வெளிக் காரியத்திலும் ஈடுபடலாம்.

பராசக்தியாகிய சாந்தியை உள்ளத்தில் வைத்துக் கொண்டு, உள்ளே நிறைந்திருக்கும் சாந்தத்தை வெளியிலும் வைத்துக் கொண்டு விளங்கும் தக்ஷிணாமூர்த்தியை நாம் தினந்தோறும் ஸ்மரிப்பதே ஆத்ம தியானத்துக்கு அழைத்துச் செல்லும்.



# அம்மா



ரா. கணபதி

## 9. ஆசாரியக் கணவர் சிஷ்ய மனைவி

ஞான போதனையே வித்தைகளின் அரசு. அது அதிநுட்பமானது. பவித்திரமானது. உத்தமமானது. நேர்முகமாக அநுபவிக்கத் தக்கது. தர்ம மயமானது. கடைப்பிடிப்பதற்கு இனியது. என்றும் மாறாமலிருப்பது.

அதை உனக்கு உபதேசிப்பதற்காக மெய்ப்பொருளை அநுபவித்த ஞானிகள் வருவார்கள். அவர்களுக்குப் பணிவிடை செய்து, உபதேசத்தைப் பணிவுடன் உன்னிக் கேட்டு உய்த்துணருவாயாக !

— ஸ்ரீமத் பகவத்கீதை 9, 2; 4, 34.

‘தற்கொலைக்கு ஊசி போதும், பிறரைக் கொல்லக் கத்தி கபடா வேண்டும்; தன்னைத் தானே கடைத்தேற்றிக் கொள்ளச் சிறிது படிப்பறிவு போதும்; பிறருக்கு உபதேசிக்க நிறையப் படிப்பறிவு வேண்டும்’ என்றவரல்லவா ராமகிருஷ்ணர்?

சாரதாமணிக்குக் கத்தியும் கபடாவும் வேண்டாம். ஆனால் எதிர்காலத்தில் அவளிடமிருந்து ஞான போதனை பெறவும் பலர் வருவார்கள். தம்மைத் தேடி நாஸ்திகர்களும், சந்தேகப் பிரகிருதிகளும் உட்பட ஏராளமானவர் வரப்போவது போல் இல்லை. சாரதையைத் தேடி வரப்போகிறவர்கள், தாமே விரும்பிப் ‘பலி’ யாகிறவர்கள். அவர்களைக் ‘கொல்வதற்கு’ — அதாவது, அவர்களின் அகங்காரத்தைக் கொல்வதற்கு — அவளுக்குச் சில சிறிய ஆயுதங்களையாவது தர வேண்டும் என எண்ணம் கொண்டார் ராமகிருஷ்ணர். அதற்கு அவளைத் தயார்ப்படுத்தவே போதனையைத் தொடங்கினார்.

ஆகா, சாரதாவும் ராமகிருஷ்ணரும் எத்தனை விதமான பாவனை உறவுகளில் தொடர்பு கொண்டார்கள்? வெளிப்பார்வைக்குக் கணவன் — மனைவி; இவரது உள்ளுக்குள்ளோ மகன் — தாய் என்றே எண்ணினார்; அவள் உள்ளுக்குள்ளே தெய்வம் — அடியாள் என்று கருதினாள்; இப்போது குரு — சிஷ்யர்களாகிறார்கள். பிறகு இவர் பக்தராகவும் அவள் அம்பாளாகவும் ஆவதையும் பார்க்கப் போகிறோம்.

யாக்ஞவல்கிய மகரிஷி தமது தூய பத்தினி மைத்ரேயிக்கு உபதேசம் செய்த உபநிஷத காலம் மீண்டும் உயிர்கொண்டது. சாரதை காமார்புகூரில் சிறிது காலமே ஏட்டுக் கல்வி பயின்றாள். அக்காலத்தில் பெண்களுக்குத் தாய்மார்கள் சொல்லித் தருகிற பாடல்களிலேயே புராண இதிகாச போதனையும், பண்பு போதனையும் நடந்து விடும். தயிர் கடைந்து கொண்டே அம்மா பாடுவாள். குழந்தை கேட்டுக் கேட்டுக் கற்றுக்கொண்டு விடும்; அதன் மனத்தையும் கடைந்தாகி விடும். ‘பாவுல்’கள் என்கிற நாடோடிக் கூட்டம் வீடு வீடாக வந்து யாசகம் கேட்கும்போது, அரிய பெரிய உபதேசங்களையும், கதைகளையும் பாட்டிலே தந்துவிட்டுப் போய்விடுவார்கள். ‘யாத்ரா’ எனப்படும் தெருக்கூத்துப் போன்ற நாடகங்களும் கல்வியை உள்ளடக்கியவையே. இவ்வாறு உழைப்பிலே குழைத்தும், கலையிலே இழைத்தும் வழங்கப்பட்ட கல்வியைச் சாரதையும் பெற்றிருந்தாள். இப்போது மகா குருவான பகவான் ராமகிருஷ்ணரிடம் ‘படிக்க’த் தொடங்கினாள். சாரதைக்குப் பெரிய வேதாந்த, தந்திர, யோக சாஸ்திரங்களை ராமகிருஷ்ணர் போதிக்கவில்லை. கத்தி கபடாவே கிடையாது. எளிய போதனைகளையே தந்தார். அவள் ஓயாமல் உழைக்கிற உழைப்புக்கு ஊக்கம் தந்தார். அந்த உழைப்பிலேயே பல உவமைகளைத் தேடி உபதேசம் தந்தார். தனியாகப் புத்தகம், வகுப்பு, பாடம் என்றில்லாமல் உலகில் நிகழும் சகல சம்பவங்களுக்குள்ளும் பாடங்களை யாத்து அவளுக்குப் போதித்தார்.

“சாரதே! மழை ஜலத்தைப் பார்த்தியா, அது மேட்டு நிலத்திலே தங்கி நிற்கிறதே யில்லை. பள்ளமா இருக்கிற இடங்களைத் தேடித்தான் போய்த் தேங்குகிறது. அதுமாதிரிதான், தங்களை உசத்தியா நினைச்சுண்டு, தற்பெருமை

யும் கர்வமும் பிடிச்சவாகிட்டே ஈசுவர கிருபை நிற்காது; பணிவாக இருக்கிறவா கிட்டத்தான் அது தேங்கி நிற்கும்'' என்று படிப்புக்கு அக்ஷராப்பியாசம் தொடங்கினார்.

போதிக்கப்படாமலே, அவளுக்குப் பணிவும், அவர் உபதேசித்த மற்ற பல பண்புகளும் தெரியும். ஆனால் அந்தப் பணிகளையும், பண்புகளையும் பற்றி அவர் விளக்குவது போல் அவளுக்கு எடுத்துச் சொல்லத் தெரியாது. மல்லிகைப் புஷ்பத்திடம், 'உன்னுடைய சுகந்தத்தைப் பற்றி வியாசம் எழுது' என்றால் அதற்கு எழுதத் தெரியுமா? அப்படித்தான் இருந்தாள் சாரதை. ஆனால் எதிர்காலத்தில் பிறரை உத்தேசித்து அவள் சிறிது சிறிது விளக்கவும் அறிந்திருக்க வேண்டும் என்றே அவா போதனையைத் தொடங்கினார்.

நீரை ஏந்திக்கொள்ளும் பள்ளம் போலவே அவரது உபதேசத்தை ஏந்திக் கொண்டது சாரதையின் உள்ளம்.

அவர் சொன்னதை உன்னிப்புடன் செவிமடுத்த சாரதை, ''நீங்க சொன்ன திலேருந்து எனக்கு இன்னொண்ணுகூடத் தோணறது...'' என்று கூறி அவரது முகத்தைப் பார்த்தாள் ஆர்வமாக. அவருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. ''ஊம், ஊம், சொல்'' என்று ஊக்கி உற்சாகப்படுத்தினார்.

''ஜலம் பள்ளத்தை நோக்கிப் பாயறது. அதோ பாருங்கோ, அங்கெல்லாம் ஜலம் வற்றிக் கொண்டே இருக்கு. சூரியனின் கிரணம்தானே அந்த ஜலத்தை மேலே தூக்கிண்டு போறது? மனுஷ மனசு கிழேதான் போகும்; ஆனால் ஸ்வாமியோட அநுக்கிரகம் அதை மேலே தூக்கிண்டு...'' — மகா பெரிய அகத்துக்காரரிடம் தானும் பெரிய விஷயம் பேசுகிறோமே என்றெண்ணிக் கண்களை மூடிக் கொண்டாள் சாரதை.

மூடிய கண்களுடன் பாலாக விளங்கிய அந்த முகத்தில் சூரிய கிரணங்கள் தின்னெனப் படிந்தன.

''சபாஷ், சபாஷ், பலே பேஷ்!'' என்று ஆர்ப்பரித்தார் ராமகிருஷ்ணர். அற்புதமான சிஷ்யரைக் கண்டுபிடித்து விட்டால் குரு அடைகிற ஆனந்தத்துக்கு ஈடு உண்டா? சத்குரு கிடைக்க வேண்டும் என்று சிஷ்யன் ஏங்குவது போல் சத்தான சிஷ்யன் கிடைக்கவேண்டும் என்று ஏங்கும் குரவர்களும் உண்டே!

''சூரிய ரச்மி தன்னைத் தூக்கறதுக்கு ஜலம் எந்தத் தடையும் உண்டாக்கிக்கல்லே. ஆனால் பகவான் அநுக்கிரகம் கிடைக்க முடியாதபடி ஜீவன் எத்தனையோ தடைகளைஉண்டாக்கிக்கிறான். ஜனங்களுக்காக உழைக்கிறது, பகவானை நினைக்கப் பிரார்த்திக்கிறது — இந்த இரண்டும்தான் தடையை விலக்கும்...''

சாரதை குறுக்கிட்டாள்: ''ராத்திரி கூடச் சொன்னேனே, 'உலகத்துக்காகவும் உழைக்கணும், ஆனா புகை மூட்டத்திலே இருக்கிற மாதிரி அதுலேயே இருந்துட்டா ஆபத்து, அப்பப்போ வீட்டை விட்டுட்டு மூணு நாளாவது ஏகாந்த தியானம் பண்ணணும்'னு...''

ராமகிருஷ்ணர் அவளை அகழ்ந்து விடுவது போல் பார்த்தார். இவள் உலகத்தை விட்டு மூன்று நாட்கள் ஏகாந்த தியானம் என்று அமர்ந்தால் என்ன ஆகும்? ஏக அந்தமாக, முடிவான ஒன்றேயாக அப்படியே ஒடுங்கிவிடுவாள்! இவள் உலகத்தில் இருக்க வேண்டியவள்தான்.

''ஆமாம், ஆனால் நீ வீட்டை விட்டுப் போகவே வேண்டாம். தினந்தோறும் வீட்டிலேயே தெய்வ ஞாபகத்தை விடாமல் தியானம் செஞ்சாலே போதும்'' என்றார் ராமகிருஷ்ணர்.

இருவரும் விடுநோக்கி நடந்தார்கள். ''குடத்து மேலே செம்பை வெச்சுண்டு வருகிறே; என்னோட பேசிண்டு இருக்கே; எதிரே வரதையெல்லாம் பார்க்கிறே. ஆனாலும் குடங்கள் உருளாமலும் ஏதோ ஓர் உள் நினைவிலே அதைக் கவனிச்சுண்டேதானே இருக்கே! அப்படியேதான் காரியங்கள் எத்தனை இருந்தாலும் உள் நினைவு ஒண்ணு அம்பாளைச் சுற்றியே இருக்கணும். ஒரு கையினாலே கம்பத்தை இறுக்கிப் பிடிச்சுண்டு, இன்னொரு கையை இஷ்டத்துக்கு வீசியபடி குழந்தைகள் கிறு கிறுன்னு சுற்றும் பாரு, அந்த மாதிரி ஒரே சமயத்திலே ஒரு கை சர்வேசுவரியிடமும், ஒரு கை உலகத்துக்குன்னும் பழக்கிக்கணும். அன்னன்னிக்கும் உலக வேலை ஒயறப்போ இரண்டு கையாலும் அம்பாளின் பாதார விந்தங்களை அழுந்தப் பிடிச்சுக்கணும்...''

வீடு வந்துவிட்டது.

சாரதை சமையற்கட்டுக்குப் போய் விட்டாள்.

அவர் சொன்னதெல்லாம் அவளுக்குள் பயிராகத் தொடங்கின. முதலில் அன்பைக் கொட்டி அவளது மனத்தை நன்றாக ஈரமாக்கி விட்டுப் பிறகு அவர் தூவிய உபதேச விதைகள் ஜம்மென்று முளைவிட்டன. விதை தூவிய பூமியும் மிக உயர்வானதாயிற்றே!

'லௌகிகத்தில் ஈடுபட்டவா மனசு ஈர நெருப்புக் குச்சி மாதிரி. ரொம்பத் தேச்சாத்தான் நெருப்பு வரும். சுத்தமான மனசைப் பட்டும் படாமலும் உரசினாலே போறும். ஞான அக்னி

பிடிச்சுண்டுடும்' என்று ராமகிருஷ்ணர் கூறுவதுண்டு. சாரதை அப்படிப்பட்ட காய்ந்த குச்சியாக இருந்தாள்.

ஒரு விதத்தில் ஈரம், இன்னொரு விதத்தில், அடியோடு ஈரமின்மை! ஆம், பிறர் என்று வரும்போது ஈரம், சுயம் என்கிறபோது ஈரமின்மை!

மகான்கள் ஆயிரமாயிரம் மக்களுக்கு உபதேசிக்கிறார்கள். ராமகிருஷ்ணரும் எத்தனையோ பேர்களுக்கு உபதேசித்தார். ஆனால் உபதேசத்தை அப்படியே பிடித்துக் கொண்டவர் ஆயிரத்தில் ஒருவர்தாமே!

''மலய மாருதம் வீசறப்போ, வஜ்ரம் உள்ள மரங்களெல்லாம் அந்தக் காற்றை உள்ளுக்குள்ளே வாங்கிக்கும்; உடனே அந்த மரங்கள் சந்தனமாயிடும் —இப்படி ஒரு நம்பிக்கை. மூங்கில், வாழை, பப்பாளி மாதிரி வஜ்ரமில்லாத மரங்களெல்லாம் எத்தனை மலய மாருதம் வீசினாலும் அப்படியேதான் இருக்குமாம். உள்ளுக்குள்ளே ஓர் அழுத்தம் — வஜ்ரம் மாதிரி உறுதி— இருக்கிறவா மகான்களோடே உபதேசத்தை உறிஞ்சிண்டு ஞான சந்தனமா வாசனை வீசறு; உள்ளத்திலே உறுதியே இல்லாம, பொத்தலா இருக்கறவாளுக்கு எத்தனை உபதேசமும் பிரயோஜனப்படறதில்லே'' என்று ராமகிருஷ்ணர் மூன் கட்டில் பைரவி பிராம்மணியிடம் கூறிக் கொண்டிருந்தார்.

அந்த வாக்குகள் மலயமாருதமாக சாரதையின் வஜ்ர உள்ளத்தில் புகுந்து அவளில் அறிவின் பரிமளத்தைப் பரிணமிக்கச் செய்தது.

ஆம், ஒரு விதத்தில் சாரதையின் மனசு மிக மிக மிருதுவான அனிச்ச மலர்; இன்னொரு விதத்திலோ கல்லைப் போல் கனத்த வஜ்ரம். பிறருக்கு மலர்; தனக்குத் தானே வஜ்ரம்!

பைரவி பிராம்மணியோ மாறாக மற்றவர்களிடம் வஜ்ரமாக இருந்தாள்.



வஜ்ரத்தை வைரம் என்றும் சொல்லுவார்கள். இவள் சாரதையிடம் அர்த்தமில்லாத வைரம் பாராட்டினாள். உள்ளுக்குள்ளே சிறு வேதனையும் தாங்க முடியாத மலராக அவதிப்பட்டது பைரவியின் மனம். 'தான் உயர்ந்தவள்' என்று அவள் எண்ணியவுடன் அந்த உயர்ந்த மேட்டில் தங்காமல் பகவத் கிருபை வெளியேறத் தொடங்கி விட்டது!

பூஜைக்கு ஆயத்தம் செய்யலானாள் பிராம்மணி.

''அம்மா, உங்கள் பூஜைக்கு என்ன நிவேதனம் செய்ய வேண்டுமோ, உத்தரவிடுங்கள், செய்கிறோம்!'' என்று ராமேசுவரரின் மனைவியும், சாரதாமணியும் பணிவுடன் கேட்டுக் கொண்டனர்.

''நீங்கள்ளாம் தொட்டதை நான் நைவேத்தியம் பண்ணறதுக்கோ, சாப்பிடறதுக்கோ இல்லை. சுயம்பாகம் பண்ணிப்பேன். எனக்கு வேண்டிய வஸ்துவெல்லாம் கொடுத்துடுங்கோ'' என்றாள் பிராம்மணி கடுமையாக.

''அவா கேக்கறதை யெல்லாம் கவனிச்சுக் கொடுங்கோ. முக்கியமா அவாளுக்கு மிளகாயும், மற்ற கார தினுசுகளும் நிறைய வேணும். வஞ்சனையில்லாமல் அந்த வியஞ்சனங்களெல்லாம் இடிச்சுத் தாங்கோ'' என்றார் ராமகிருஷ்ணர். கரீலெனப் பேசும் பைரவிக்கு நிறையக் கார வஸ்துக்கள் கொடுக்கச் சொன்னபோது உள்ளுக்குள் சிரித்துக் கொண்டேயிருந்தார் அவர். அந்த உள் சிரிப்பை பிராம்மணியோ, சாரதாமணியோ, அவளது ஓரகத்தியோ புரிந்து கொள்ளவில்லை.

''சாரு, பைரவியம்மாவுக்குப் பூர்விகம் கிழக்கு வங்காளம். அதனாலே அவாளுக்குக் காரம் நிறைய வேணும். ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு ருசி. குழந்தையிலே நீ ஈச்சம் பழத்தை ஓயாமத் தின்னுவே. எனக்குச் சில மசாலாவிலே பிரீதி. இவாளுக்குக் காரம் வேண்டியிருக்கு. இப்படியேதான் பக்தி பண்ணறதிலேயும் பல மார்க்கம்.''

சாரு உணவு சமைக்கிறாள்; இவர் அவளது உள்ளத்தைச் சமைக்கிறார்!

''என்ன, கிச்சடி பண்ணப் போறயாக்கும்! அரிசி, உருளைக் கிழங்கு, பருப்பு எல்லாத்தையும் பானையிலே போட்டுக் கொதிக்க வெச்சிருக்கியே! பானைக்குள்ளே சாப்பிடறதுக்கான சகல வஸ்துவும் இருக்கு. ஆனா, வேகாமல் அதைச் சாப்பிட முடியவில்லை. வெந்த பிற்பாடும் இதே வஸ்துக்கள் தான் இருக்கு. புதுசா ஒண்ணும் வந்துவிடவில்லை. ஆனா வெந்தாத்தான் உள்ளேயிருக்கிற ருசி வெளியே வரது; கெட்டியாக இருக்கிற பதார்த்தம் சாப்பிடறப்பலே மிருதுவாகிறது. இப்படிச் செய்யறது எது? சூடுதான். இப்போ பானையும் சுடறது. அதுக்குள்ளே இருக்கிற அரிசி, பருப்பு, ஜலம், கறிகாய் எல்லாம் சுடறது. ஆனா, சூடு அதுகள் கிட்டவே உண்டாகல்லே. அடியிலே இருக்கிற நெருப்பிலே இருந்துதான் வரது. நம்ம உடம்பு ஒரு பானை. பத்து மாசம் பிரும்மா பிசைஞ்சு செஞ்ச ஆண்டியோட தோண்டி இந்த உடம்பு. இதுக்குள்ளே இந்திரியங்கள், மனசு, புத்தி எல்லாம் இருக்கு. பகவானுடைய அநுக்கிரக அக்னியை மூட்டிண்டாத்தான் அதெல்லாம் பக்குவமாகும். 'அநுக்கிரகம்'னு தனியா பெறாதபோதுகூட, உடம்புக்குள்ளே பல சக்திகள் இயங்குகிறதற்குக் காரணம் அந்த ஈசுவர சக்திங்கிற அக்னிதான். பானையைச் சரியா அந்த அக்னியிலே வெச்சுட்டா 'நறுக்கரிசி' தட்டாம பக்குவமாவோம். இந்திரியம், புத்தி, மனசுங்கிற வியஞ்சனங்களைச் சரியான விகிதாசாரத்தில் கலந்துண்டோம்னா உலகத்துக்கெல்லாம் ருசிக்கிற மாதிரி பக்குவமாக ஆவோம். பரிமாறச்சே அக்னி கண்ணுக்கே தெரியல்லை. ஆனா அது இல்லைன்னா உணவே கிடையாது. கண்ணுக்குத் தெரியாமே பகவத் சக்தி எல்லாத்திலேயும் ஊறிப் பக்குவம் பண்ணுகிறது.''

அந்தக் குழந்தைக்கு ரொம்பவும் உபதேசித்து விட்டோமோ என்றெண்ணி, ''சரி, இதிலே இன்னும் கொஞ்சம் லவங்கம், ஓமம், சேம்பு எல்லாம் போடேன்'' என்று பரம லௌகிகமாகப் பேச்சை மாற்றினார்.

''உங்களுக்கு ரத்தக் கடுப்பாயிருந்ததுன்னு ஹ்ருதய் சொன்னானே! தக்ஷிணேசுவரத்துக் கங்கையிலே ரொம்ப உப்பேறிப் போச்சுன்னும், அதை உங்களுடைய மிருதுவான குடல் தாங்காதுன்னும்தான் முக்கியமாக இங்கே வந்திருக்கிறதாச் சொன்னானே! மசாலா வஸ்துக்கள் உங்களுக்கு ஒத்துக்குமா?'' என்று கேட்டாள் மதனி.

''என்னா மன்னீ, இப்படிச் சொல்லிட்டேள்?'' என்று சிறு பையனாகச் சிணுங்கினார் மகான் ராமகிருஷ்ணர். ''நான் என்னோட பவதாரிணி அம்மாவையும், ராஜோபசாரம் செய்யற மதுர்பாபுவையும், பக்தாள் கொண்டுவர பஞ்சபட்சிய பரமான்னங்களையும் விட்டுட்டு இங்கே எதுக்கு வந்தேன் தெரியுமா? மன்னியோட மசாலா சமையலை ஒரு கை பார்க்கறதுக்குத்தான். நீங்களானா இப்படிச் சொல்லிட்டேளே?''' என்று குழந்தை



இந்த டிசம்பர் 5-ந் தேதியோடு 'கல்கி' அவர்கள் அமரத்துவம் அடைந்து பதினேழாண்டுகள் ஆகின்றன. இத்தருணத்தில் அவரது திருவுருவத்தை இவ்விதழ் மேலட்டையில் இடம் பெறச் செய்து நமது அஞ்சலியையும் சமர்ப்பிக்கிறோம். மேலட்டையில் அலை ஓசையை அவர் செவியுறும்போதே கற்பனையும் அலை அலையாக அவர் உள்ளத்தில் எழக் காண்கிறோம்.

அமரர் கல்கி அவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் சரித்திர புருஷராக விளங்கினார் என்பது மட்டுமல்ல; அவர் தாம் காலமான பிறகும் சரித்திரம் படைத்திருக்கிறார்! எவ்வாறெனில், பொன்னியின் செல்வன் இரண்டாவது முறையாகக் கல்கியில் தொடர்ந்து பிரசுரமாகத் தொடங்கியபோது கல்கி பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை முப்பதாயிரம் பிரதிகள்வரை கூடியது.

ஒரு தொடர்கதையை முன்னிட்டு - அதுவும் இரண்டாவது தடவையாகத் தொடர்ந்து பிரசுரமாகும் ஒரு கதையை முன்னிட்டு-ஒரு பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை இந்த அளவுக்கு உயருவதென்பது இந்நாட்டுப் பத்திரிகை உலகில் இன்றுவரை யாரும் கண்டறியாத அற்புதம்!

கல்கி அவர்கள் அமரத்துவம் அடைந்த இத்தினத்தில் வாசகர்களுக்கு மற்றொரு மகிழ்ச்சிகரமான செய்தியைத் தெரிவித்துக் கொள்கிறோம்: அலை ஓசை மீண்டும் கல்கியில் பிரசுரமாகப் போகிறது என்ற நற்செய்திதான் அது.

கல்கி
ஜனவரி
16
பொங்கல்
மலரில்
ஆரம்பமாகிறது

# அமரர் கல்கி எழுதிய அலை ஓசை

யாகக் குழைந்தார். ராமேசுவரரின் மனைவிக்கு ஒரே அன்பும், வெட்கமுமாகிவிட்டது. வீட்டிலோ மசாலா வஸ்துக்களே இல்லை. யாரையோ உடனே துரத்தி ஓட்டமாக ஓடி அவற்றை வாங்கி வரச் செய்து சமையலில் சேர்த்தாள்.

சுத்தப் பொன்னில் சேர்க்கிற செம்பு போல், அவதாரப் பொன்னில் சிறிது மாயா செம்பு உண்டல்லவா? ராமகிருஷ்ணர் விஷயத்தில் மசாலாவில் உள்ள பற்று, புகைக்குழாய் பிடிக்கும் ஆசை இவைதான் அந்தச் செம்பு! அவரே அப்படிச் சொல்லியிருக்கிறார்.

''ஆகா; உருளைக் கிழங்கெல்லாம் எவ்வளவு நன்னா வெந்துடுத்து!'' என்று கும்மாளியிட்டுக் குதித்தார் ராமகிருஷ்ணர்.

''ஆமாம், நன்னா ஸித்தியாயிடுத்து'' என்றாள் சாரதை.

வங்கத்தில் வெந்து பக்குவமானதை 'ஸித்தி'யாகியது என்றே சொல்வர்.

''ஆங், அதுதான் சரியான வார்த்தை ....ஸித்தி, ஸித்தி! ஸித்தியானா உருளைக்கிழங்கு எத்தனை மிருதுவாயிடறது பார்த்தியோ! அப்படித்தான் ஸித்தி அடைந்த ஆத்மாக்களோட மனசும் மிருதுவாயிடும்...சரி, இன்னும் என்னெல்லாம் சமைக்கப் போறேள்?''

''லூசி பொரிக்கணும்'' என்று கூறிக் கொண்டே மதனி 'லூசி' எனும் அப்பங்களை எண்ணெயில் போட்டாள்.

'சளபுள' என்று ஏக சத்தம் எழுந்தது. அப்பம் வேக வேகச் சத்தம் குறைந்தது. அது முற்றிலும் பக்குவமானவுடன் சத்தம் அடியோடு நின்றது.

''லூசி மாதிரிதான் பகவத் அநுபவம் நன்னா ஊறிப் பக்குவமாற மட்டும் ஏகமா சத்தம் போட்டு வாத விவாதங்கள் பண்ணுவோம். தரிசனம் கிடைச்சுடுத்துன்னா அப்படியே வாய் அடங்கிடும்''! என்றார் ராமகிருஷ்ணர்.

''வாணலியைப் பார்த்து இறக்கு, சாரு! இந்த மாதிரிக் காய்ஞ்ச துணியாலே இறக்கினா, ஒரு வேளை துணியிலேயே நெருப்புப் பிடிச்சண்டாலும் பிடிச்சுடும். அதனாலே எப்பவும்ஒரு ஈரத் துணியை அடுக்களையிலே கையோட வெச்சுக்கணும்'' — வேதாந்தம் மட்டுமின்றி, சின்னச் சின்ன லௌகிக காரியங்களிலும் உபதேசம் தந்தார்.

''சரி, சமையல் வேலை ஆச்சா! பைரவியம்மா பூஜையிலே உட்கார்ந்துட்டா. அவா பூஜைக்கு சுசுருஷை பண்ணு. முதலிலே அந்தத் தீபத்தைப் பாரு. திரியிலே நெருப்பு எவ்வளவு பெரிசா படர்ந்து எரியறது! திரி நுனியெல்லாம் கரிஞ்சு போயிருக்கு.

விளக்கை அணைக்காமலே அந்த இடத்தை மட்டும் அலாக்கா வெட்டிடலாம். எப்படித் தெரியுமா....?'' என்று கேட்டவர் தாமே போய் ஒரு கத்திரிக் கோல் கொண்டு வந்தார். திரியின் கரிந்த நுனிப் பகுதியை மட்டும் நறுவிசாகக் கத்திரித்தார்.

''எங்கே, அதோ அந்தப் பக்கம் இருக்கிற தீபத்திலே நீ இப்படியே திரியை வெட்டிப் பாரு'' என்று சாரதையிடம் கத்திரியை நீட்டினார்.

'பக்கத்திலேயே பைரவ ஸ்வரூபமாயிருக்கிற பைரவி! இவரோ சோதனை வைக்கிறார். பூஜை வேளையில் தீபம் அணைந்துவிட்டால் என்னவாகும்?' என்று நடுங்கியபடியே கத்திரியை வாங்கிக் கொண்டாள் சாரு. பலவிதத்தில் உழைத்து உழைத்து, 'நிகா' தெரிந்து கொண்டவள் அல்லவா? நடுக்கத்திலும் வெகு சரியாகத் திரியைக் கத்திரித்து விட்டாள்.

சபாஷ் போட்டார் ராமகிருஷ்ணர்.

இரட்டை தீபங்கள்.

இரட்டை தீபங்களைப் போல் இந்தத் தம்பதி.

சீதாபதியை ஆராதித்த பைரவி அவ்விருவரையுமே ஒரு விநாடி சீதையும் அவள் பதியுமாகப் பார்த்தாள் போலும். அவள் அவர்களைப் பார்த்த பார்வையில் அன்பின் மூலாம் ஏறியிருந்தது.

''பூஜை பண்ற எடத்திலே சத்தம் போட்டது தப்புத்தாம்மா'' என்று பாசாங்காக மன்னிப்புக் கேட்டார் ராமகிருஷ்ணர்.

''பூஜைப் பிரசாதம் எடுத்துக் கோங்கோ'' என்று பைரவி பிராம்மணி எல்லோருக்கும் விநியோகம் செய்தாள்.

படு காரமான அந்தப் பொரியலை யாராலும் உண்ணவே முடியவில்லை.

''உங்கள் ராமசந்திரன் மகா பொறுமைசாலி. அவனாலே இதைத் தின்ன முடியும். என்னுடைய பலஹீன குடலுக்கு இது தோதுப்படாது'' என்று சிரித்துக் கொண்டே கூறிவிட்டார் ராமகிருஷ்ணர்.

ராமேசுவரரின் மனைவியும் [வெளிப்படையாக, ''ஆனாலும் மகா காரம் தாயே, குடலே எரிஞ்சுடும் போலேயிருக்கு'' என்று கூறிவிட்டாள்.

ஊருக்கு இளைத்த பிள்ளையார்கோயில் ஆண்டியாக சாருதான் வகையாக மாட்டிக் கொண்டாள்.

''இந்தாம்மா சாரு, நீ பிரசாதம் வாங்கிக்கோ. ருசி பார்த்தா பிரசாதத்தைச் சாப்பிடுவா? பகவானுக்கு அர்ப்பணமாச்சுங்கறதை நெனைச்சுத்தான் சாப்பிடணும்'' என்றாள் பைரவி.

பயந்து கொண்டே கையை நீட்டினாள் சாரு. அதில் விழுந்தது மிளகாய்க்கே காரம் போதிக்கக்கூடிய அற்புதச் சுவை பொருந்திய நிவேதனம்.

''சிம்மவாஹினி!'' என்று மனத்துக்குள் பிரார்த்தித்துக் கொண்டே அதை வாயில் போட்டுக் கொண்டாள் சாரு. கள்ளென்று மூளை வரையில் உறைத்தது. விக்கல் கண்டுவிடும்போல் இருந்தது. மூச்சை எக்கிப் பிடித்துக்கொண்டு விக்காமல் சமாளித்துக் கொண்டாள்.

''எப்படியிருக்கு?'' என்று கேட்டாள் பைரவி.

''ரொம்ப நன்னாயிருக்கு'' என்று பரிதாபமாகச் சொன்னாள் சாரதா.

ஜன்மத்தில் முதல் பொய் சொன்னதற்குப் பிரதியாகவோ என்னவோ, பைரவி இன்னொரு உருண்டை பொரியலை அவள் கையில் ஆசையாக வைத்தாள். ''நீதான் சமர்த்து'' என்று நற்சாட்சிப் பத்திரம் கொடுத்தாள்.

சாரதை தனியாகத் தவித்தாள்.

அந்த இரண்டாவது கவளத்தையும் வாங்கி வாயில் போட்டுக் கொண்டாள். நாக்கு பட்டைவிட்டது. அதை வேறு மாதிரி வெளியே காட்டாமலிருக்கலாம். ஆனால் இந்தக் கண்கள் இப்படிக் கண்ணீரைக் கொட்டித் தொலைக்கின்றனவே!

''என்னவோ புழுதி விழுந்துவிட்டது'' என்று இரண்டாவது பொய்யைச் சொல்லிக் கொண்டு, முகத்தைச் சுத்தம் செய்வதுபோல் கிணற்றடிக்குப் போனாள் சாரு. (தொடரும்)

---

# இசை சென்றது: இதயங்களை வென்றது!

அமெரிக்காவுக்குச் சென்று அண்மையில் தான் திரும்பியிருக்கும் திரு லால்குடி ஜயராமனை, "அங்கிருந்து என்ன கொண்டு வந்தீர்கள்?" என்று நண்பர்கள் கேட்டால், "நமது கர்நாடக சங்கீதத்துக்கும், தமிழ் நாட்டுக்கும், பாரதத்துக்கும் புகழை மூட்டை மூட்டையாகக் கொண்டு வந்திருக்கிறேன்" என்கிறார். அப்படியும் சந்தேகம் தீராமல், "அவ்வளவுதானா சுவாமி? கையிலே வேறே ஒன்றும் எடுத்துக் கொண்டு வரவில்லையா?" என்று வினவினால், "இரண்டு பட்டங்கள் கொடுத்தார்கள்; ரமணியும் நானும் ஆளுக்கு ஒன்றாகப் பிடித்துக் கொண்டு பறந்து வந்து விட்டோம்" என்கிறார், சிலேடையாக.

டேப் ரிகார்டர், ஃப்ரிஜிடேர், டிரான்ஸிஸ்டர், கைக் கடிகாரம் என்று ஒன்றையுமே காணுமே என்பதால் ஏமாற்றப் பெருமூச்சு விட்டுவிட்டு, "அப்படியானால் அங்கே என்னதான் நடந்தது?" என்று கேட்டால், "அப்படி வாருங்கள், வழிக்கு: எல்லாம் பிரமாதமாக, அமோகமாக, அமர்க்களமாக நடந்தது; விவரமாகச் சொல்கிறேன், உட்காருங்கள்" என்று உற்சாகத்துடன் பேச ஆரம்பிக்கிறார்!

* * *

நியூயார்க்கில் வசிக்கும் தமிழர்கள் சிலர் ஒரு சந்தர்ப்பத்தில் கூடி அளவளாவிக் கொண்டிருக்கையில், இந்திய சங்கீதத்துக்கு அமெரிக்காவில் உள்ள வரவேற்பு பற்றிப் பேச்சு திரும்பியது. "ஹிந்துஸ்தானி இசை பிரபல மடைந்திருக்கும் அளவுக்குக் கர்நாடக இசை பிரபலமடையவில்லையே?" என்றார் ஒருவர்.

உடனே இன்னொருவர் கேட்டார்: "குறைப்பட்டுக் கொண்டு என்ன பயன்? கர்நாடக இசை இங்கு பிரபலமடைய நாம் என்ன செய்திருக்கிறோம்?"

இந்தக் கேள்வியின் விளைவாகப் பிறந்தது, கிழக்கு — மேற்குப் பரிவர்த்தனைக் கழகம். (East - West Exchange Inc) ஏனெனில், இப்படி ஒரு ஸ்தாபனமாக இயங்கினால்தான் அமெரிக்காவுக்கு இசை வல்லுநர்களைத் தருவிக்க முடியும், பல்கலைக் கழகங்களுடன் தொடர்பு கொள்ள இயலும், கச்சேரிகள் நடக்க அரங்கங்களைத் தேடி குறிப்பிட்டுப் பெற முடியும். தனி நபர்களாய், உதிரியாய் இருந்து எத்தனைதான் முயன்றாலும் அங்கு அதிகமாக எதையும் சாதித்துவிட முடியாது. இதை உணர்ந்து அமெரிக்க வழக்கறிஞர் ஒருவரை இவர்கள் அணுகிய போது அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் இலவசமாக ஆலோசனைகள் வழங்கி இந்த ஸ்தாபனம் உருவாக உதவினார்.

சங்க அங்கத்தினர்கள் யாவரும் பல்வேறு துறைகளில் அமெரிக்காவில் சிறப்பாகப் பணியாற்றி வருகிறவர்கள். உதாரணமாகத் தலைவர் சுந்தரராமன் ஒரு பல்கலைக் கழகத்தில் கணிதப் பேராசிரியர் என்றால் காரியதரிசி திரு உமாசங்கர் ஓர் இன்ஷூரன்ஸ் நிறுவனத்தில் உயர் பதவி வகிக்கிறார். பொருளாளர் எஸ். சங்கரன், கூட்டுக் காரியதரிசி ஏ. பி. சங்கரன் ஆகிய அனைவருமே உற்சாக புருஷர்கள். இங்கிருந்து அமெரிக்காவுக்குச் செல்லும் கர்நாடக இசை வல்லுநர்களில் அநேகமாக அனைவருமே திரு வி.கே. பாலசுப்பிரமணியம், திரு வி. கே. விசுவநாதன் சகோதரர்களின் விருந்தோம்பலை அனுபவித்திருப்பார்கள். தப்புவது சாத்திய மில்லாதவாறு அன்பு அரணைச் சூழ்ந்து நிற்கும்!



சென்னை விமான நிலையத்தில் சங்கரன், ஜயராமன், ரமணி.

இத்தகைய ரசிக உள்ளங்களின் கூட்டு முயற்சியால் கழகம் ஏற்பட்டு அரசாங்க ஆதரவு சிறிதும் இன்றி இசை வல்லுநர்களைத் தமிழகத்திலிருந்து அமெரிக்காவுக்கு வரவழைப்பது என முடிவாகியது. முதன் முதலாக யாரைத் தருவிப்பது என்ற கேள்வி எழுந்தபோது எல்லாரும் ஏகமனதாக லால்குடி திரு ஜயராமனை வயலினுடன் இங்கு பறந்து வந்துவிடச் சொல்ல வேண்டியதுதான் எனத் தீர்மானித்தனர்.

ஆயினும், 'அமெரிக்கா செல்வம் கொழிக்கும் நாடு என்பது உலகப் பிரசித்தமாயிற்றே? ஆகவே இங்கு வருகிறவர் என்ன



வாஷிங்டன் கச்சேரி :
ராகவன், ஜயராமன், ரமணி, ஸ்ரீமதி சரோஜா பாலசுப்பிரமணியம்.

வெல்லாம் எதிர்பார்ப்பாரோ ?' என்று அவர்களுக்கு ஒரு பக்கம் பயம். 'விமான டிக்கெட்டுக்குப் பணம் கொடுத்து மீண்டாலே பெரிய காரியம் ஆயிற்றே : இங்கு வரும் எப்படியிருக்குமோ' என்றெல்லாம் கவலைப்பட்டார்கள்.

''அமெரிக்காவில் கர்நாடக இசையைப் பிரபலப்படுத்தத் தமக்குக் கிடைக்கும் வாய்ப்புக்கு அதிகமாகத் தாம் எதையும் எதிர்பார்க்கவில்லை'' என்ற திரு ஜயராமனின் பதில் கடிதம் அவர்களுக்கு நிம்மதி அளித்ததுடன் உற்சாகத்தையும் இரட்டிப்பாக்கியது.

'உங்களுடன் இன்னும் ஒரு வித்வானையும் அவசியம் அழைத்து வாருங்கள்' என்று அவர்கள் குறிப்பிட்டிருக்கவே ஜயராமன் தம்முடன் அடிக்கடி வாசித்துத் தம் பாணியில் பழகியுள்ள வேணுகான ரமணியை உடன் வருமாறு கோரினார்.

இங்கிருந்து புறப்படுவதற்கு முன்பாகவே ஜயராமன் ஒன்பதுவிதமான நிகழ்ச்சி நிரல்களைத் தயாரித்துக் கொண்டார். தாம் வாசிக்கப் போகும் ஒவ்வொரு ராகம், சாகித்யம்; தாளம் ஆகியவை பற்றிய விவரங்களை ரசிகர்களுக்கு வழங்க அச்சடித்து எடுத்துக் கொண்டு சென்றார். மேற்கத்திய பாணி 'நொடேஷன்'களைத் தயாரிக்க, டாக்டர் கிருஷ்ணசாமி பெரிதும் உதவி புரிந்ததாக நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறார், திரு ஜயராமன்.

கச்சேரிகளுக்குரிய நாட்கள் நெருங்க நெருங்கக் கிழக்கு — மேற்கு பரிவர்த்தனைக் கழகம் போட்ட கணக்கெல்லாம் தவிடுபொடியாகி விட்டது. எட்டு கச்சேரிகள் நடத்தலாம் என்று எண்ணி வந்த இந்தக் கழகம் கடைசியில் ஜயராமன் — ரமணியின் இருபத்தைந்து கச்சேரிகளுக்கு ஒத்துக் கொள்ள வேண்டியதாயிற்று ! இவை தவிர பங்களாதேஷ் அகதிகள் நிதிக்காக மூன்று கச்சேரிகள்! பதினைந்து கச்சேரிகளுக்கான அழைப்புகளை ''நேரமில்லாததால் முடியவில்லை'' என்று மறுதளிக்க நேர்ந்தது. இரண்டு மாத சுற்றுப் பயணத்துக்குத்தான் 'விசா' எடுத்திருந்தனர். ஆதலால் இப்படி ஏமாற்றம் அளிக்கும்படியாகி விட்டது.

அமெரிக்காவிலிருந்து பிரமாதமாக ஒன்றும் கொண்டு வராதது ஒருபுறமிருக்கட்டும்; அமெரிக்காவை நன்றாகச் சுற்றிப் பார்த்தார்களோ என்றால் ''அதற்கு இன்னொரு தடவைதான் ஸார் போகவேண்டும்'' என்கிறார் திரு ஜயராமன்.

எங்கே, ஒரு கச்சேரி முடிந்து திரும்பிச் சிரம பரிகாரம் செய்து கொள்ளு முன்னரே இன்னொரு ஊரில் அடுத்த கச்சேரிக்குக் கிளம்ப வேண்டும் என்றால் ஊரைச் சுற்றிப் பார்க்க ஏது அவகாசம்? ''ஏதோ முடிந்த மட்டும் பார்த்தோம்'' என்கிறார்.

கச்சேரி தொடங்க ஒரு மணி நேரம் முன்பே அரங்குக்குப் போய் ஏற்பாடுகளைக் கவனிப்பார். மைக் தேவைப்பட்ட இடங்களில் ரமணிக்கும் தமக்கும் சரியானபடி வைக்கப்பட்டிருக்கிறதா என்று பார்ப்பார். பெரும்பாலான அரங்குகளுக்கு மைக் தேவையே இல்லை. விசாலமான இடமானாலும் எதிரொலி இன்றித் துல்லியமாகக் கடைசி மூலை வரை நன்றாகக் கேட்குமாறு அமைக்கப்பட்ட சிறந்த அரங்கங்கள் அவை. மேடை அலங்காரத்திலும் கவனம் செலுத்தினார் ஜயராமன். தியாகையர் படமோ அல்லது நடராஜர் விக்கிரகமோ இப்படி ஏதோ ஒன்று இருக்க வேண்டும், ஊதுபத்தி மணம் கமழ வேண்டும் என்பதில் எல்லாம் கருத்துச் செலுத்தினார்.

''அதெல்லாம் சரி, நம் இசையை அமெரிக்கர்கள் எப்படி ரசித்தார்கள்? அதைச் சொல்லுங்கள்'' என்றால் ஜயராமன் பரவசமாகி விடுகிறார்.

''அவர்கள் ஆர்வத்தை என்னவென்பது? பல இடங்களில் நம்மைப் போலவே தரையில் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டார்கள். ஒரு தடவை தாளம் போட்டுக் காண்பித்தால் போதும்; 'பக்'கென்று பிடித்துக் கொண்டு தப்பாமல் போடுகிறார்கள். நம் இசையைப் பற்றி விளக்கிச் சொன்னால் உடனே கிரகித்துக் கொள்கிறார்கள். முதல் முக்கால் மணி நேரம் நான் வாசிப்பேன். பிறகு ரமணி மட்டும் வாசிப்பார். அப்புறம் இருவரும் சேர்ந்து வாசிப்போம். சாதாரணமாகப் பாட்டு முடிந்த பிறகு தான் கரகோஷம் செய்வது அங்கெல்லாம் வழக்கம். ஆனால் ஸ்வரங்களை நாங்கள் மாற்றி மாற்றி வாசித்த போது ரசிகர்கள் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கரஒலி எழுப்பி மகிழ்ந்தார்கள். விறுவிறுப்பான சங்கீதம் என்றால் மெய்சிலிர்க்கிறார்கள். தொடக்கத்தில் வர்ணம், கடைசியில்

இல்லாது — என்னமாய் ரசிக்கிறார்கள் இவற்றை !

''அமெரிக்காவின் கிழக்குக் கரையோரப் பகுதிகளிலும் மையப் பகுதிகளிலும் திருச்சி சங்கரனும் ராமநாதபுரம்ராகவனும், மேற்குக் கரையோரப் பகுதிகளில் திரு ரங்கநாதனும் அருமையாக மிருதங்கம் வாசித்தார்கள். இவர்கள் எல்லாம் அங்கங்கே பல்கலைக் கழகங்களில் மிருதங்க போதகர்களாகப் பணியாற்றுவதால் அந்தந்தப் பகுதிகளுக்கு அவரவர்கள் ஒத்துழைப்பைப் பயன்படுத்திக் கொண்டோம். மிருதங்கத்தில் விரல்கள் விளையாடும் வேகத்தை அமெரிக்கர்களால் தாங்கவே முடியவில்லை! குழல் என்றால் அங்கே 'பட்டன் ஸிஸ்டம்' பொருத்தப்பட்ட குழல் தான் உண்டு. 'மூங்கில் குழாயில் துவாரங்களின் மீது விரல்கள் பலவிதமாய்ப் படிந்து எழுந்து இத்தனை குழைவுகளையும், நெளிவு களிவுகளையும் சுநாதமாக எழுப்ப முடியுமா?' என்று ஆச்சரியப்படுகிறார்கள். வயலினில் கமகத்தைக் கேட்டதுமே, 'ஓ! நமக்கு நன்கு பரிச்சயமான இந்த வாத்தியத்தில் நாம் இதுவரை அனுபவித்தறியாத இத்தனை ஒலி நயம் உண்டா!' என்று பிரமிக்கிறார்கள்.

''இத்தனை கச்சேரிகளில் ஒரே ஒரு இடத்தில்தான் காலதாமதமாயிற்று. அதுவும் எதிர்பாராத அளவு கூட்டம் வந்ததால் அனைவருக்கும் டிக்கெட்டு வழங்கி அமரச் செய்ய ஏற்பட்ட தாமதம்தான். வில்லியம்ஸ் என்ற ஊரில் கச்சேரி முடிந்தபிறகும்கூடக் கூட்டம் கலைந்து போக மனமின்றி மூன்று நிமிஷ நேரம் கரகோஷம் செய்து எங்களைத் திணற அடித்தது. அப்போது நண்பர் ஜேம்ஸ் ரூபின் 'இன்னொரு பாட்டு வாசியுங்கள்' என்று அவர்கள் ஆசைக்கு வார்த்தை வடிவம் தந்து விளக்கினார். அவ்வாறே செய்தோம்.

''ஒவ்வோர் இடத்திலும் கச்சேரி முடிந்த பிறகு விரும்பியவர்கள் வித்வானைச் சந்தித்துப் பேசலாம் என்று அறிவிப்புச் செய்தோம். ரொம்ப ஆர்வத்துடன் பலர் சந்தேக விளக்கங்கள் பெற்றனர்.''

திரு ஜயராமன் சிறந்த வயலின் வித்வான் மட்டுமல்ல, நல்ல பேச்சாளர் என்பதும் இந்தச் சுற்றுப் பயணத்தின் போது நிரூபணமாயிற்று. யேல் பல்கலைக் கழகத்தில் அவர் கர்நாடக சங்கீதம் பற்றிப் பேசினார். ரேடியோ, டெலிவிஷன் பேட்டிகள் தவிர வேறு மூன்று பல்கலைக் கழகங்களில், 'டெமான்ஸ்ட்ரேஷன்' என்ற விளக்கத்துடன் கூடிய நிரூபண நிகழ்ச்சிகள் மூலம் நமது சங்கீதத்தில் ஈடுபாட்டினை வளர்த்தனர் ஜயராமனும் ரமணியும்.

'' 'இது ஆரம்பம்தான். கிழக்கு மேற்குப் பரிவர்த்தனைக் கழகம் ஆற்ற வேண்டிய பணி எவ்வளவோ பாக்கியிருக்கிறது ' என்று நினைவூட்டிவிட்டு வந்தேன்'' என்றார் திரு ஜயராமன்.

''நமது சங்கீதத்தில் அமெரிக்கர்கள் இத்தனை ஈடுபாடு காட்டக் காரணம் என்னவாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டதற்கு ஜயராமன் கூறினார்:

''அவர்களுக்குச் சகல சம்பத்துக்களும் இருக்கின்றன; ஆயினும் ஆன்ம திருப்தி மட்டும் இல்லை. இதை நமது சங்கீதம் அளிக்கிறது. பரபரப்பான வாழ்க்கை காரணமாக முறுக்கேறிய உள்ளம் விடுபட்டுச் சாந்தி பெறவும் நமது இறையுணர்ச்சியுடன் கூடிய இசை உதவுகிறது. இமைகளை மூடித் தியான நிலையில் அமர்ந்து கேட்கும்போது பலர் கண்ணீர் பெருக்குவதையே நான் பார்த்தேன் !''

''கணக்கிலடங்காத செல்வத்தை வாரி வழங்கி நமக்கு உபகாரம் செய்துள்ள அமெரிக்கரைக் கண்ணீர் விடச் செய்துவிட்டீர்களே, நியாயமா?'' என்று வேடிக்கையாகக் கேட்டுவிட்டு விடைபெற்றோம்.

— குட்டி கிருஷ்ணன்



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

அத்தியாயம் 75

## விபரீத விளைவுகள்

தஞ்சைபுரி அரண்மனையின் அந்தரங்க மந்திராலோசனை மண்டபத்தில் பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி தர்ம சிங்காதனத்தில் வீற்றிருந்தார்.

அரண்மனைப் பெண்டிர்களில் முக்கியமானவர்கள் அவருக்கு இருமருங்கிலும் அமர்ந்திருந்தார்கள்.

சோழநாட்டு அமைச்சர்களும் தளபதிகளும் அரசிளங்குமாரர்களும் சக்கரவர்த்தியின் முன்னிலையில் வணக்கமான பாவனையில் நின்றுகொண்டிருந்தார்கள்.

பெண்டிர்களிலே மூத்த எம்பிராட்டியான செம்பியன்மாதேவியும், உடைய பிராட்டி வானமா தேவியும், இளைய பிராட்டி குந்தவையும், கொடும்பாளூர் இளவரசி வானதியும் காணப்பட்டனர். அவர்களுடன் கலந்து நிற்பதற்குத் தயங்கிய பூங்குழலியும் சற்றுத் தூரத்தில் காணப்பட்டாள்.

ஆடவர்களிலே பெரிய பழுவேட்டரையரும், சின்னப் பழுவேட்டரையரும் முதன்மந்திரி அநிருத்தரும், சேநாதிபதி பெரிய வேளாரும், மிலாடுடையார் மலையமானும், இளவரசர் அருள்மொழிவர்மரும், புனர்ஜன்மம் பெற்ற மதுரரந்தகத் தேவரும், பார்த்திபேந்திரப் பல்லவனும், முதன் மந்திரிக்குப் பின்னால் சற்று ஒதுங்கித் திருமலையும் இருந்தனர்.

சக்கரவர்த்தி சபையில் கூடியிருந்தவர்களைக் கண்ணோட்டமாகப் பார்த்துவிட்டு, ''அழைத்தவர்கள் எல்லாரும் வந்திருக்கிறார்களா? கடம்பூர் மன்னரைக் காணோமே?'' என்றார்.

''சம்புவரையரின் மகன் இப்போது தான் திரும்பி வந்தான். தந்தையும் மகனும் விரைவில் இங்கு வந்துசேருவார்கள்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஓ! கந்தமாறன் திரும்பி வந்துவிட்டானா? என்ன செய்தி கொண்டு வந்தான்? தப்பி ஓடியவர்களைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டானா?'' என்று சுந்தர சோழர் வினவினார்.

''இல்லை, பிரபு! அவர்களைப் பிடிக்க முடியவில்லை. ஆனால் வந்தியத் தேவனைக் கொன்று விட்டதாகச் சொல்லுகிறான். இன்னொரு பைத்தியக்காரன் அகப்படவில்லையாம்! தப்பிப் போய்விட்டானாம்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

பெரிய பழுவேட்டரையர் இப்போது ஒரு ஹுங்காரம் செய்தார். அவர் ஏதோ சொல்லப் போகிறார் என்று மற்றவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் ஒன்றும் சொல்லவில்லை.

சக்கரவர்த்தி, ''நான் செய்த தவறினால் இன்னும் என்னென்ன விளைவுகள் நேருமோ தெரியவில்லை! முதன் மந்திரி! என் மனத்தில் உள்ள எண்ணங்களை நீர் நன்கு அறிந்திருக்கிறீர். எனக்கும் என் குலத்துக்கும் மிகவும் வேண்டியவர்களை இங்கே இப்போது அழைத்திருக்கிறேன். எதற்காக அழைத்தேன் என்பதையும் என் கருத்தையும் நீர்தான் இவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். என்னைக் காட்டிலும் தெளிவாக உம்மால் சொல்ல முடியும் அல்லவா?'' என்றார்.

''ஆக்ஞை சக்கரவர்த்தி!'' என்று முதல் அமைச்சர் கூறிவிட்டுச் சபையோரைப் பார்த்துச் சொன்னார்:

"பல காரணங்களினால் சக்கரவர்த்தியின் உள்ளம் புண்பட்டிருப்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். அபிமன்யுவையும் அரவானையும் ஒத்த வீராதி வீரரான மூத்த மகனைச் சமீபத்தில் நம் மன்னர் பலி கொடுக்க நேர்ந்தது. இளவரசர் இறந்த காரணமோ



இன்னமும் மர்மமாக இருந்து வருகிறது. மூன்று ஆண்டு காலமாக அந்த வீரத் திருமகனை நம் அரசர் பார்க்கவில்லை. காஞ்சியில் பொன் மாளிகை கட்டிவிட்டுத் தந்தையை அங்கே வந்து தங்கியிருக்க வேண்டும் என்று கரிகாலர் செய்திக்குமேல் செய்தி விடுத்தார். ஆயினும் சக்கரவர்த்தி போகவில்லை. அதன் காரணம் நீங்கள் எல்லோரும் அறிந்ததே. இந்தத் தஞ்சை மாநகரில் சக்கரவர்த்தி சின்னப் பழுவேட்டரையரின் பாதுகாப்பில் இருந்து வந்தார். நாடு நகரங்களில் பலவித வதந்திகள் உலவி வந்தன. அத்தகைய சந்தர்ப்பத்தில் சக்கரவர்த்தி தஞ்சையை விட்டுச் சென்றால், பழுவேட்டரையர்களிடம் அவருக்கு நம்பிக்கை குன்றிவிட்டதாக யாரேனும் எண்ணக் கூடும் அல்லவா? அத்தகைய எண்ணத்துக்கு இடம் கொடுக்கச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. நம் அரசர் சொல்வதற்குத் தயங்கக் கூடிய ஒரு செய்தியை நான் வெளிப்படையாகச் சொல்கிறேன். அதற்காக இங்கே கூடியுள்ள மன்னர்குலத் தலைவர்கள் என்னை மன்னிக்க வேண்டும். நம் அரசர் கோமான் சில காலமாக உடல் நோயுற்றுக் கால்களின் சக்தியை இழந்திருந்தார். அதனால் அவர் உள்ளம் நலிவுற்றிருந்தது. ஆனால் அதைக் காட்டிலும் அதிகமாக அவர் உள்ளத்தைப் புண்படுத்திய மன நோய் ஒன்றும் இருந்தது. சோழர் பெருங்குலத்துக்கு உற்ற துணைவர்களாயும், பரம்பரையாக அக்குலத்துடன் உறவு பூண்டவர்களாயும், இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கும் வைரத் தூண்களாயும் இருந்த நீங்கள் ஒருவரோடொருவர் வேற்றுமைப்பட்டுப் பகைமை பூண்டிருந்தது நம் சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் புண்படுத்தி உடல்நோயையும் வளர்த்து வந்தது. யானைமேல் துஞ்சி வீர சொர்க்கம் அடைந்த இராஜாதித்தரின் தலைமையில் நீங்கள் அனைவரும் ஒருமுகமாகத் தக்கோலப் போர்க்களத்தில் சண்டையிட்டீர்கள். அந்தப் போர்க் களத்தில் இராஜாதித்தர் எதிர்பாராத விதமாக வீர மரணம் அடைந்தபடியால் சோழ சைன்யம் தோல்வியுற்றது. ஆனால் உங்களுடைய வீரத்தினாலும் உறுதியினாலும் ஒற்றுமையினாலும் அத் தோல்வியையே வெற்றியாக மாற்றினீர்கள். இழந்த தொண்டை மண்டலத்தையும் கங்க மண்டலத்தையும் திரும்பக் கைப்பற்றினீர்கள். சேவூர்ப் போர்க்களத்தில் பாண்டியர்களை முறியடித்துப் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி நமது நேர் ஆளுகைக்குள் கொண்டு வந்தீர்கள். ஈழ நாட்டில் மகிந்தனைப் புறங்கண்டு புலிக் கொடியை உயர்த்தினீர்கள். இவ்வளவு அரும் பெரும் காரியங்களை நீங்கள் அனைவரும் ஒருமைப்பட்டுச் சோழ சாம்ராஜ்யத்தின் நலமே உங்கள் நலம் என்று கருதி வந்ததினாலே சாதிக்க முடிந்தது.

''அத்தகைய நன்னிலைமை சில ஆண்டுகளாக மாறிவிட்டது. எக் காரணத்தினாலோ உங்களுக்குள் மன வேற்றுமை ஏற்பட்டு விட்டது. இரண்டு கட்சியாகப் பிரிந்து விட்டீர்கள். இந்தப் பிளவை நீக்க வேண்டும் என்று நம் அரசர் பெருமான் எவ்வளவோ பாடுபட்டார். தமக்குப் பிறகு அரசுரிமை யாருக்கு என்பது பற்றித்தான் உங்களுக்குள் வேற்றுமை என்பதை அறிந்தார். நீங்கள் யாரும் அதை நேர்முகமாகச் சக்கரவர்த்தியிடம் சொல்லவில்லை. ஆனாலும் இணையற்ற அறிவாளியான நம் பேரரசர் அதை ஊகித்து அறிந்தார். அரசுரிமை விஷயத்தை உங்கள் எல்லோருடனும் கலந்து மனம் விட்டுப் பேசிச் சமரசமாகத் தீர்த்து வைக்க விரும்பினார். அவ்விதம் தீர்த்து வைத்த பின்னரே காஞ்சிக்குச் செல்வது என்று எண்ணி யிருந்தார். சிவஞான கண்டராதித்த பெருமானின் திருக்குமாரருக்கே இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை உரிமையாக்க எண்ணி யிருந்தார். இதை ஆதித்த கரிகாலரையும் ஒப்புக்கொள்ளச் செய்யலாம் என்று எண்ணியிருந்தார். அதற்காகவே கரிகாலரை இங்கு வரும்படி சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். அதற்கிடையில் எதிர்பாராத துயரச் சம்பவம் நிகழ்ந்து விட்டது. கரிகாலர் கடம்பூர் மன்னரின் மாளிகைக்கு வருகிறார் என்று அறிந்தபோது சக்கரவர்த்தி மனம் பூரித்தார். இதன் மூலம் உங்களுக்குள் ஏற்பட்டிருந்த வேற்றுமை நீங்கி விடும் என்று எண்ணினார். கரிகாலர் சம்புவரையரின் திருக் குமாரியை மணந்து கொண்டால் முன்போல் நீங்கள் அனைவரும் ஒருமனப்படுவீர்கள் என்றும், இராஜ்ய உரிமை விஷயத்தையும் சுலபமாகத் தீர்த்துக் கொள்ளலாம் என்றும் எண்ணினார். நானும் அவ்விதமே நினைத்தேன். உங்களில் பலரும் அவ்விதமே எண்ணி யிருப்பீர்கள். நம் திருக்கோவலூர் மன்னர்கூட அதனாலே தான் ஆதித்த கரிகாலர் கடம்பூர் செல்வதற்குத் தடை சொல்லவில்லை. ஆனால் நம் எல்லாருடைய ஆசையும் பங்கம் உற்றது. கடம்பூர் அரண்மனையில் இளவரசர் கரிகாலர் அகால மரணம் அடைந்தார்...''

''அது எப்படி நேர்ந்தது என்பதைக் கண்டறியப் போகிறோமா, இல்லையா? இதைத் தெரிந்து கொண்டு மேலே

நீங்கள் பேசுவது உசிதமாக இருக்கும்'' என்றார் திருக்கோவலூர் மலையமான்.

''ஆமாம்; அதைத் தெரிந்துகொள்ளாமல் மேலே எந்த யோசனையும் செய்வது சாத்தியமில்லை!'' என்றார் சேனாதிபதி.

''வீரப் பெருமக்களே! நடந்தது நடந்து விட்டது. போனதைப் பற்றிக் கிளறிக் கொண்டிருக்க வேண்டாம் என்று சக்கரவர்த்தி கருதுகிறார்!'' என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

''அது எப்படி முறையாகும்? சோழ குலத்தின் நீதி பரிபாலனம் உலகப் பிரசித்தியானது. இந்த ராஜ்யத்தில் ஒரு திக்கற்ற அநாதை உயிரிழந்தாலும் அது எப்படி நேர்ந்தது என்று விசாரிக்கப்படுகிறது. அதற்கு யாராவது காரணம் என்று ஏற்பட்டபின் தக்க தண்டனை விதிக்கப்படுகிறது. அப்படியிருக்க, பட்டத்து இளவரசர் என்று முடிசூடிய இளங்கோவின் அகால மரணத்தை எவ்வாறு விசாரிக்காமல் விடுவது?'' என்றார் சேனாதிபதி பெரிய வேளார்.

சுந்தர சோழர் பெருமூச்சு விட்டு, ''கொடும்பாளூர் மாமா! கேளுங்கள்! என் அருமை மகன் அகால மரணம் அடைந்ததில் என்னைவிடத் துயரம் வேறு யாருக்காவது இருக்க முடியுமா? நானே விசாரணை வேண்டாம் என்கிறேன். ஏன்? இங்குள்ள யாரும் அதற்குப் பொறுப்பாளி அல்ல என்று நிச்சயமாக அறிந்துள்ளேன். நான் செய்த பாவத்தின் பயனாக என் மகனைப் பறிகொடுத்தேன். அதற்குப் பிராயச்சித்தம் என்ன உண்டோ சொல்லுங்கள்! செய்து விடுகிறேன். வேறு காரணம் தேட வேண்டாம்!'' என்றார்.

''பிரபு! தாங்கள் இப்படிச் சொல்லுவதினால், குற்றத்துக்குப் பொறுப்பாளியான யாரையோ காப்பாற்ற விரும்புகிறீர்கள் என்று ஏற்படும். நாட்டு மக்கள் ஏற்கனவே இளவரசரது மரணத்தின் காரணம் பற்றிப் பலவாறாகப் பேசிக் கொள்ளுகிறார்கள். உண்மையைக் கண்டுபிடித்து வெட்டவெளிச்சமாக்கி விடுவதுதான் நல்லது. குற்றவாளி யாராயிருந்தாலும் உரிய தண்டனைக்கு ஆளாக வேண்டியதுதான்!'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''நூற்றில் ஒரு வார்த்தை! அதுதான் நேர்மையான ராஜரீக முறை. இந்தப் பெருங் குற்றத்தை விசாரித்துத் தண்டியாவிட்டால், நாட்டு மக்களுக்கு நீதி பரிபாலனத்திலேயே நம்பிக்கை குன்றிப் போய்விடும்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''பெரியோர்களே! இதைப் பற்றி ஏன் இவ்வளவு யோசனையும் வாதப் பிரதிவாதமும்? இந்தச் சிறுவன் கூறுவது அதிகப்பிரசங்கமாக இருந்தால் மன்னித்து அருளுங்கள். குற்றவாளி தண்டிக்கப்பட்டு விட்டான்! இளவரசர் கரிகாலனைக் கொன்றவனும் என் சகோதரியின் வாழ்க்கையைப் பாழாக்கி அவளைப் பைத்தியமாக அடித்தவனுமான பாதகன் வந்தியத் தேவனை நானே என் கைவேலால் கொன்று விட்டுத் திரும்பினேன். இன்னும் என்னத்திற்கு விசாரணை?'' என்றான் கந்தமாறன்.

முதன் மந்திரி முதலில் பேசிக்கொண்டிருந்தபோதே கந்தமாறன் அங்கே வந்துவிட்டான். அவன் வந்திருந்ததை அவன் குரலைக் கேட்ட பிறகுதான் மற்றவர்கள் கவனித்தார்கள்.

அவர்களில் பெரிய பழுவேட்டரையர் மெல்லிய குரலில், ''மூடன்! நிர்மூடன்! கடம்பூர் சம்புவரையருக்கு இப்படிப் பட்ட பிள்ளை வந்து பிறந்தானே!'' என்று முணுமுணுத்தார்.

முதன் மந்திரி அநிருத்தர் ''கந்தமாறா! வந்தியத் தேவனை நீ வேல் எறிந்து கொன்றது உண்மைதானா? அவனை நீ பார்த்தாயா? இரவு நேரத்தில் அல்லவா அவனை நீ துரத்திச் சென்றாய்?'' என்றார்.

''முதன் மந்திரி! உங்களுக்கு என் பேரில் எப்போதும் நம்பிக்கை இல்லை என்பதை அறிவேன். இரவாக இருந்தாலும் ஆளைத் தெரியாமல் போகுமா?''

''அவனும் வீரனாயிற்றே! உன்னுடன் சண்டை போடவில்லையா?''

''ஆமாம், என்னுடைய வீரத்திலும் தங்களுக்கு நம்பிக்கை கிடையாதுதான். ஆகையால் சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் கொள்கிறேன். ஓடியவர்கள் இரண்டு பேர். ஒருவன் சில வருஷங்களாக நம் பாதாளச் சிறையிலிருந்த பைத்தியக்காரன். அவன் என்னைத் தடுக்க யத்தனித்தபோது இன்னொருவன் ஆற்றின் அக்கரையை நெருங்கிக் கொண்டிருந்தான். வேல் எறிந்து அவனைக் கொன்றேன். அவன் வாணர் குலத்து வந்தியத்தேவனாகவே இருக்க வேண்டும்...''

''இறந்து போனவனுடைய உடலை நீ உன்னுடன் எடுத்து வரவில்லையா?''

''நீர் இப்படிச் சந்தேகிப்பீர் என்று தெரிந்திருந்தால் வடவாற்று வெள்ளத்தில் இன்னும் கொஞ்ச தூரம் தேடிப் போயிருப்பேன். ஆனால் இந்த மந்திராலோசனை சபைக்கு வந்திருக்க முடியாது!'' என்றான் கந்தமாறன்.

''ஆமாம்; நீ வராமலிருந்தால் பெரு நஷ்டமாயிருக்கும்!'' என்றார் தளபதி சின்னப் பழுவேட்டரையர்.

''தம்பி! வந்தியத்தேவனைத் தேடிப் பிடிப்பதில் உனக்கு என்ன அவ்வளவு சிரத்தை?'' என்று பெரிய வேளார் பூதி விக்ரம கேசரி கேட்டார்.

''இதைக் கேட்கவும் வேண்டுமா? என்னுடைய வீட்டில் அந்தத் துயர சம்பவம் நிகழ்ந்தது. உண்மைக் குற்றவாளி அகப்படா விட்டால் என் பேரிலும், என் தந்தையின் பேரிலும் நீங்கள் சந்தேகப்பட மாட்டீர்களா?''

சுந்தர சோழர் தலையிட்டு, ''பிள்ளாய்! கந்தமாறா! அப்படியெல்லாம் வேறு யார் சந்தேகப்பட்டாலும் நான் சந்தேகப்பட மாட்டேன். உன் தந்தைக்கு என்னிடமுள்ள பக்தி விசுவாசத்தை நான் அறியேனா? போகட்டும்! பெரிய சம்புவரையர் எங்கே?'' என்றார்.

''சக்கரவர்த்தி! எங்கள் குடும்பத்தின் அவமானத்தை நானே சொல்லிக் கொள்ள வேண்டியிருக்கிறது. நான் வந்தியத் தேவனைக் கொன்றுவிட்டுத் திரும்பியதாக என் தந்தையிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். அதை என் தங்கை மணிமேகலை கேட்டுக்கொண்டிருந்தாள். நான் கூறியதைக் கேட்டதும் அவள் என்னையே கத்தியால் குத்திக் கொல்ல வந்துவிட்டாள். அவளைச் சாந்தப்படுத்தி, அவளுடைய வெறியைத் தணிக்க என் தந்தை முயன்று கொண்டிருக்கிறார். விரைவில் வந்துவிடுவார். இந்த மந்திராலோசனை சபையில் என்ன முடிவாகிறதோ, அதைத் தாமும் ஏற்றுக்கொள்வதாக என்னிடம் சொல்லி அனுப்பினார்!'' என்றான் கந்தமாறன்.

''அப்பனே! உன் சகோதரி முன்னமேயே 'இளவரசரை நான்தான் கொன்றேன்!' என்று பித்துப் பிடித்தவள் போலச் சொல்லிக் கொண்டிருந்தாள் அல்லவா?'' என்றார் கிழவர் மலையமான்.

''ஆம், ஆம்! வந்தியத்தேவன் செய்த குற்றத்தை மறைத்து அவனைத் தப்புவிப்பதற்காகவே அவ்வாறு அவள் சொன்னாள். அப்போது அவள் முழுப் பைத்தியமாகியிருக்கவில்லை. இப்போது பைத்தியம் முற்றிப் போயிருக்கிறது. எங்கள் குலத்தின் துரதிர்ஷ்டம்!'' என்றான் கந்தமாறன்.

''இளஞ் சம்புவரையரே! வந்தியத்தேவர்தான் இளவரசர் கரிகாலரைக் கொன்றதாக அவ்வளவு தீர்மானமாய்ச் சொல்கிறீரே? அது எப்படி? நீரே உம் கண்ணால் பார்த்தீரா? அல்லது பார்த்தவர்கள் யாரேனும் சொன்னார்களா?'' என்று முதன் மந்திரி அநிருத்தர் கேட்டார்.

''அமைச்சர் ஐயா! கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா? இளவரசர் இறந்து கிடந்த இடத்தில் அந்த வாணர் குல வீரன்தான் இருந்தான். அவன் முகத்தைப் பார்த்தாலே குற்றவாளி என்று எழுதி ஒட்டியிருந்ததுபோல் தெரிந்தது. அதுவோ பழுவூர் இளைய ராணியின் அந்தப்புரம். அங்கே இவன் வேறு எதற்காகப் போனான்? குற்றவாளியில்லாவிட்டால், பாதாளச் சிறையிலிருந்து ஏன் தப்பித்து ஓடியிருக்க வேண்டும்?'' என்றான் கந்தமாறன்.

''பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியவனைப் பிடித்துக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் பொறுப்பை முதன் மந்திரி ஏற்றுக் கொண்டார். அதை இந்தச் சமயத்தில் ஞாபகப் படுத்துகிறேன்'' என்றான் பார்த்திபேந்திரன்.

''பல்லவர் குலக் கோமகனே! நான் அவ்வாறு ஏற்றுக் கொண்டது உண்மைதான். ஆனால் இளஞ் சம்புவரையர் இவ்விதம் தாமே நீதிபதியாகி விசாரித்து முடிவு செய்து தண்டனையையும் நிறைவேற்றிவிடுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. வந்தியத்தேவரும் பழைமையான வாணர் குலத்தில் தோன்றியவர். அவருடைய மூதாதையர் ஒரு சமயம் பெரிய இராஜ்யத்தையே ஆண்டார்கள். சோழர் குலத்துக்குப் பெண் கொடுத்து உறவு பூண்டார்கள். குறுநில மன்னர் குலத்தில் வந்தவர்கள் மீது குற்றம் ஏற்பட்டால், சக்கரவர்த்தியே தர்மாசனத்தில் வீற்றிருந்து விசாரித்து முடிவு செய்வதுதான் மரபு!'' என்றார் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர்.

''ஐயா! சிறையிலிருந்து தப்பி ஓடியவனை உயிருள்ளவனாகப் பிடித்து வரலாம்; அல்லது உயிரற்றவனாகவும் பிடித்து வரலாம் என்பதும் மரபுதான்!'' என்றான் பல்லவர்குல வீரன் பார்த்திபேந்திரன்.

''வந்தியத்தேவனை உயிரற்றவனாகவும் இளஞ் சம்புவரையர் கொண்டு வரவில்லையே? வடவாற்று வெள்ளத்தில் விட்டு விட்டல்லவா வந்துவிட்டார்?'' என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

அச்சமயத்தில் பெரியசம்புவரையர் அந்த மந்திராலோசனை மண்டபத்தில் பிரவேசிக்கவே எல்லாருடைய கண்களும் அவர்பால் திரும்பின. அவர் முகத்தில் குடிகொண்டிருந்த வேதனையை அனைவரும் கவனித்தார்கள்.

கந்தமாறன் அவர் அருகில் சென்று மெல்லிய குரலில், ''மணிமேகலை

எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டான்.

சம்புவரையர், ''அப்படியேதான் இருக்கிறாள். உன் அன்னையை அவளுக்குக் காவல் வைத்துவிட்டு வந்தேன்!'' என்று உரத்த குரலில், சற்றுக் கடுமையாகவே கூறினார்.

சக்கரவர்த்தி சம்புவரையரைப் பார்த்து, ''ஐயா! தாங்கள் தங்கள் செல்வக் குமாரியின் அருகில் இருப்பது அவசியமானால் அவ்வாறே செய்யலாம். நம்முடைய ஆலோசனையை நாளை வைத்துக் கொள்ளலாம்!'' என்றார்.

''இல்லை, பிரபுவே! அவள் அருகில் நான் இருந்து பயன் ஒன்றுமில்லை. என் குமாரன் கை வேலினால் உயிர் துறந்த வாணர் குல வீரன் வந்தியத்தேவன் மீண்டும் உயிர் பெற்று வந்தால் ஒருவேளை பயன்படலாம்!'' என்றார் சம்புவரையர்.

அவர் பேச்சில் தொனித்த வேதனை நிறைந்த துயரமும் மனக் கசப்பும் அந்தச் சபையில் சிறிது நேரம் மௌனம் குடிகொள்ளும்படி செய்தன.

முதன் மந்திரி அநிருத்தர், ''ஐயா! தங்கள் மாளிகையில் நடந்த விபரீத சம்பவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். இளவரசர் தங்கள் மாளிகையில் அகால மரணமடைய நேர்ந்ததினால் தங்கள் உள்ளம் எவ்வளவு புண்பட்டிருக்கிறது என்பதை நாங்கள் எல்லோரும் உணர்ந்திருக்கிறோம். அதற்குத் தங்களை எந்தவிதத்திலும் பொறுப்பாக்கச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. ஆனாலும் நாடு நகரங்களில் நானாவிதமான வதந்திகள் பரவாமலிருக்கும் பொருட்டு, இளவரசரின் மரணம் எவ்விதம் நேர்ந்தது என்று நிச்சயமாகத் தெரிந்தால் நல்லது அல்லவா? இந்தச் சபையில் கூடியுள்ளவர்கள் அவ்வாறு கருதுகிறார்கள். அதைப் பற்றித் தாங்கள் ஏதாவது தெரியப்படுத்துவதற்கு இருக்கிறதா? வாணர் குலத்து வந்தியத்தேவனால்தான் இளவரசரின் மரணம் நேர்ந்தது என்று இளஞ் சம்புவரையர் சாதிக்கிறார். தங்களுடைய கருத்து என்ன?'' என்று கேட்டார்.

சம்புவரையர் சிறிது நேரம் திகைத்து நின்றார். பின்னர் நாலாபுறமும் பார்த்தார். அவருடைய பார்வை கந்தமாறன் பேரில் விழுந்ததும், ''ஆம், ஆம்! இந்த மூடன் அவ்வாறுதான் அன்றைக்கும் சொன்னான். அதை நான் நம்பவில்லை. இன்றும் நம்பவில்லை. இவன் வார்த்தையைக் கேட்டு இளவரசர் கரிகாலரைக் கடம்பூர் மாளிகைக்கு வரும்படி அழைத்தேன். அதனால் இத்தனை விபரீத விளைவுகள் நேர்ந்துவிட்டன. எனக்கும்



அன்புள்ள ஆசிரியருக்கு,

பொன்னியின் செல்வன் முடிவுறும் தருவாயில் இருக்கிற இந்தச் சந்தர்ப்பத்தில் நீண்ட நாட்களுக்கு முன்னால் திரு எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் இதனைத் திரைப்படமாக உருவாக்கப் போவதாக விளம்பரம் செய்திருந்தது நினைவுக்கு வருகிறது. அந்தத் திட்டம் என்ன ஆயிற்று? அந்த முதல் அறிவிப்புக்குப் பிறகு இதுபற்றி ஏதொன்றும் விவரம் வெளியாகவில்லையே?

சென்னை-17
11-11-71

சகுந்தலா

[திரு எம். ஜி. ஆர். அவர்களை இது பற்றி விசாரித்தபோது, பொன்னியின் செல்வனை மட்டுமல்ல, சிவகாமியின் சபதத்தையும்கூடத் திரைப்படமாக்கத் தாம் ஏற்பாடுகள் செய்து வருவதாய்த் தெரிவித்தார். இம்மாபெரும் கதைகளைச் சுவை குன்றாத விதத்தில் எந்த விதமாகச் சுருக்கிப் படமெடுக்கலாம் என்பது பற்றித் தாம் ஆலோசித்துத் திட்டங்கள் வகுத்து வருவதாய்க் கூறினார். அமரர் கல்கி அவர்களின் மேற்படி உன்னதமான படைப்புக்கள் திரைப்படமாக உருவாகும்போது மிகச் சிறப்பாக அமைய வேண்டும் என்பதில் தாம் மிகவும் கருத்துடையவராக இருப்பதாகவும், விரைவில் படப் பிடிப்பு தொடங்கும் எனவும் சொன்னார். — ஆசிரியர்]



என் குலத்துக்கும் என்றும் அழியாத அபகீர்த்தி ஏற்பட்டு விட்டது!'' என்றார்.

கிழவர் மலையமான் இரங்கிய குரலில், ''சம்புவரையரே! பதற வேண்டாம்! நடந்தது நடந்துவிட்டது! நல்ல எண்ணத்துடனேதான் தாங்கள் என் பேரப் பிள்ளையைத் தங்கள் மாளிகைக்கு அழைத்தீர்கள். கரிகாலனுடைய மரணத்துக்குத் தங்களைப் பொறுப்பாக்க இங்கே யாரும் எண்ணவில்லை. ஆகையினால்தான் உண்மையை அறிய விரும்புகிறோம்! அதற்குத் தாங்கள் உதவி செய்தால் நலமாயிருக்கும்!'' என்றார்.

''நான் என்ன உதவி செய்ய முடியும்? என் மகன் ஒன்று சொல்லுகிறான்; அதற்கு நேர்மாறாக என் மகள் இன்னொன்று சொல்லுகிறாள். இருவர் பேச்சையும் என்னால் நம்ப முடியவில்லை. எனக்கும் உண்மை தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டதுபோல் இருக்கிறது. உண்மையில் நடந்ததை அறிவதற்கு என்னைக் காட்டிலும் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர் உதவி செய்யக் கூடும். அவரைக் கேளுங்கள்! அவர்தான் எல்லாவற்றுக்கும் மூலகாரணம். அவர்தான் முதன் முதலில் மதுராந்தகத் தேவரை இரகசியமாகக் கடம்பூருக்கு அழைத்து வந்தார். என் மகளை அவருக்கு மணம் செய்து கொடுக்கும்படியும் சொன்னார். அதிலிருந்து என் குடும்பத்துக்குச் சனியன் பிடித்தது. அந்த மதுராந்தகத் தேவரே இப்போது மாயமாய் மறைந்து விட்டதாக அறிகிறேன்! பின்னர், பெரிய பழுவேட்டரையர் தமது இளையராணியை அழைத்துக் கொண்டு வந்தார். காஞ்சியிலிருந்து இளவரசரையும் வரப் பண்ணினார். இரண்டு பேரையும் என் மாளிகையில் விட்டுவிட்டுப் போய்விட்டார். ஏன் போனார் என்று கேளுங்கள். அவருடைய இளைய ராணி இப்போது எங்கே போனார் என்று கேளுங்கள்.....!''

இவ்விதம் சம்புவரையர் வெறி கொண்டவர்போல் எதையெல்லாமோ பேசிக் கொண்டே போனார்.

சக்கரவர்த்தி குறுக்கிட்டு, ''போதும்! போதும்! நிறுத்துங்கள்! இதனாலேதான் நடந்துவிட்ட காரியத்தைப் பற்றி விசாரணை ஒன்றும் வேண்டாம் என்று நான் சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை. ஏற்கனவே உங்களுக்குள்ளே இருக்கும் வேற்றுமை போதாதா? புதிய பூசல்கள் வேறு வேண்டுமா? சம்புவரையரே! உங்கள் மாளிகையில் நடந்ததற்கு நீங்கள் பொறுப்பாளி அல்ல. அதனாலேதான் உங்களை உடனே பாதாளச் சிறையிலிருந்துவிடுவிக்கச் சொன்னேன். என் வீரப் புதல்வன் அகால மரணம் அடைந்ததற்கு என்னுடைய பழைய பாவங்கள்தாம் காரணம். யார் பேரிலும் குற்றம் இல்லை. நீங்கள் அதைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம். பெரிய பழுவேட்டரையரும் எதுவும் சொல்ல வேண்டியதில்லை!'' என்றார்.

அப்போது பெரிய பழுவேட்டரையர் சிம்ம கர்ஜனையைப் போல் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பெருங் குரலில் பேசினார் :— ''சோழர் குலக் கோமானே! கருணைகூர்ந்து மன்னிக்க வேண்டும். நான் பேசாமலிருக்கலாகாது. என் மனத்தில் உள்ளதைக் கூறியே ஆக வேண்டும். உண்மையை நான் அறிந்தபடி சொல்லியே ஆகவேண்டும். ஆம், பெருமானே! உண்மையை எதற்காகச் சொல்ல வேண்டும் என்றும், சொல்லாமலே என் பிரதிக்ஞையை நிறைவேற்றி விடலாம் என்றும் எண்ணியதுண்டு. ஒரு காலத்தில் நான் நம் வேளைக்காரப் படைக்குத் தலைவனாயிருந்தேன். சோழர் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஆபத்து வரும் காலத்தில் காப்பாற்ற முடியாவிட்டால் என் தலையை நானே வெட்டிக் கொண்டு உயிர் விடுவேன் என்று பிரதிக்ஞை செய்திருந்தேன். ஆதித்த கரிகாலரைக் காப்பாற்ற என்னால் முடியவில்லை. ஆகையால் என் பிரதிக்ஞையை நிறைவேற்றியே தீர வேண்டும். அதற்கு முன்னால் எனக்குத் தெரிந்த உண்மையைச் சொல்லிவிட விரும்புகிறேன். இல்லாவிட்டால் வீணான பலப் பல சந்தேகங்கள் ஏற்பட்டு வீண் பழிகள் சுமத்தப்பட ஏதுவாகும்!''

இவ்வாறு பெரிய பழுவேட்டரையர் கூறி நிறுத்தியபோது அந்தச் சபையில் பரிபூரண மௌனம் குடிகொண்டிருந்தது. எல்லாருடைய உள்ளமும் ஒரு கணம் கனிந்து உருகிவிட்டது.

சக்கரவர்த்தி தழுதழுத்த குரலில், ''மாமா! சற்று யோசியுங்கள்! எதற்காகத் தாங்கள் நடந்துபோன காரியங்களைப் பற்றிப் பேச வேண்டும்? இறந்தவர்களின் உயிர் திரும்பி வரப் போவதில்லை. தாங்கள் மனமறிந்து சோழ குலத்துக்கு எந்தவிதத் துரோகமும் செய்திருக்க மாட்டீர்கள்! ஆகையால், நடந்து போனதை மறந்துவிட்டு இனி நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசுவோம்!'' என்றார்.

''இல்லை, ஐயா! நடந்துவிட்டதைப் பற்றி நான் பேசியே ஆகவேண்டும்.

சோழர் குலத்துக்கு நான் எவ்வளவு பெரிய துரோகம் செய்வதற்கிருந்தேன் என்று கூறியே தீர வேண்டும். தங்களுக்கும் எனக்கும் குல தெய்வமான துர்க்காதேவிதான் அவ்விதம் நேராமல் தடுத்தாள். அந்த அன்னை பரமேசுவரிக்கு என் காணிக்கையைச் செலுத்தியே தீர வேண்டும்! கருணை கூர்ந்து நான் சொல்லப் போவதைச் செவி கொடுத்துக் கேளுங்கள்!'' என்றார் பெரிய பழுவேட்டரையர். அவர் பேசுவதைத் தடை செய்ய முடியாது என்று கண்ட சக்கரவர்த்தியும் சும்மா இருந்தார்.

பின்னர், பெரிய பழுவேட்டரையர் தாம் மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் சாலையோரத்தில் நந்தினியைச் சந்தித்து அவள்பேரில் மோகங்கொண்டது முதல் நடந்ததையெல்லாம் ஒன்றையும் மறைக்காமல் எடுத்துச் சொன்னார். தம் சகோதரர் சின்னப் பழுவேட்டரையர் அடிக்கடி எச்சரிக்கை செய்தும் தாம் பொருட்படுத்தாததைக் கூறினார். நந்தினியின் தூண்டுதலினால் மதுராந்தகத் தேவருக்குச் சோழ சிங்காதனத்தை உரிமையாக்க எண்ணியதையும் அதற்காக மற்றச் சிற்றரசர்களுடன் சேர்ந்து சதி செய்ததையும் கூறினார். நந்தினியின் மூடு பல்லக்கில் மதுராந்தகனை அழைத்துப் போனதைப் பற்றியும் சம்புவரையர் மாளிகையில் ஓர் இரவில் நடந்த கூட்டத்தைப் பற்றியும் கூறினார். முதன் முதலில், வந்தியத் தேவன் காரணமாகவே நந்தினியின் பேரில் தமக்குச் சந்தேகம் உதித்தது என்றும், அதிலிருந்து பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றி யோசனை தோன்றியது என்றும் தெரிவித்தார். ஆனாலும் அவ்வப்போது நந்தினியின் மோகமாகிய மாயை தம் அறிவை மறைத்து வந்தது என்று துயரத்தோடு எடுத்துச் சொன்னார். கடைசியாக, கொள்ளிடத்து உடைப்பு வெள்ளத்தில் சிக்கிக் கொண்டதனால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் திட்டம் இன்னதென்று அறிந்து கொண்டதையும், விரைந்து திரும்பிக் கடம்பூர் சென்றதையும் கூறினார். வழியில் காளாமுக சைவரைப் போல் வேஷம் பூண்டதையும், இடும்பன்காரியின் உதவியினால் இரகசிய வழியில் சென்று அந்தப்புரத்தை அடைந்ததையும், யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்து நந்தினிக்கும் இளவரசருக்கும் நடந்த சம்பாஷணையை ஒட்டுக் கேட்கும் ஆர்வத்தினால் ஒரு நிமிடம் தாமதித்ததையும், அதற்குள் இளவரசர் மாண்டு விழுந்ததையும் தெரிவித்தார். அவரைத் தாங்குவதற்காகத் தாம் பாய்ந்து சென்றபோது விளக்கு அணைந்ததையும், தம்மைப் பலர் சூழ்ந்து தாக்கியதையும், தாம் மூர்ச்சையுற்றதையும், பச்சை மலைக் குகையில் தமக்குப் பிரக்ஞை வந்ததையும், பின்னர் திரும்பி வந்ததையும் விவரித்தார்.

''சக்கரவர்த்தி! இவ்விதம் சோழர் குலத்துக்கு நான் பெரும் துரோகம் செய்தவனானேன். பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்கு என்னுடைய அரண்மனையிலேயே இடங் கொடுத்தேன். நம்முடைய பொக்கிஷத்திலிருந்து அவர்கள் சதிச் செயலுக்கு வேண்டிய பொருள் கொண்டு போக அனுமதித்தேன். தங்களையும், தங்கள் புதல்வர்கள் இருவரையும் ஒரே சமயத்தில் கொன்று விடுவதற்கு அந்தச் சதிகாரர்கள் திட்டமிட்டார்கள். தங்களைச் செவிடும் ஊமையுமான ஒரு தெய்வப் பெண்மணி தன் உயிரைக் கொடுத்துக் காப்பாற்றினாள். பொன்னியின் செல்வரைக் கேவலம் அறிவற்ற மிருகமாகிய ஒரு யானை காப்பாற்றியது. நான் ஆதித்த கரிகாலரைக் காக்க முயன்று தோல்வியுற்றேன். அவருடைய அகால மரணத்துக்கு நானே ஆதியிலும் நடுவிலும் முடிவிலும் காரணமானேன். ஐயா! துர்க்கா பரமேசுவரியின் சந்நிதியில் நான் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையை இதோ நிறைவேற்றுவேன்!'' என்று கூறிவிட்டுத் தம் நீண்ட கரத்தில் பிடித்திருந்த வாளை வீசினார். அவருடைய நோக்கத்தை அறிந்துகொண்ட அனைவரும் திடுக்கிட்டுப் பிரமித்து நின்றார்கள். சிறிது சிறிதாக அவர் அருகில் நெருங்கி வந்திருந்த பொன்னியின் செல்வர் மட்டும் சட்டென்று பாய்ந்து பெரிய பழுவேட்டரையரின் வாள் ஓங்கிய கரத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டார்.

''ஐயா! பொறுங்கள்! வழிவழியாகச் சோழர் குலத்து மன்னர்களின் முடிசூட்டு விழாவின்போது பழுவேட்டரையர்கள்தான் கிரீடத்தை எடுத்துத் தலையில் வைப்பது வழக்கம். என் பட்டாபிஷேகத்தின் போதும் தங்கள் ஆகிவந்த கரத்தினால்தான் முடிசூட்ட வேண்டும். அதற்குப் பிறகு தங்கள் விருப்பம் போல் செய்து கொள்ளலாம். அது வரையில் பொறுத்திருங்கள்!'' என்றார்.

இந்த வார்த்தைகள் சக்கரவர்த்தியையும் மற்றக் குறுநில மன்னர்களையும் வியப்புக் கடலில் ஆழ்த்தின என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

(தொடரும்)



# ஸ்கூட்டரில் போனோம் லண்டன்வரை!

சென்னை ஸ்டேட் பாங்கில் பணியாற்றும் நால்வர், புதிதாக வாங்கப்பட்ட மூன்று ஸ்கூட்டர்களில் பயணம் செய்து ஐரோப்பிய நாடுகளில் பெரும்பாலானவற்றை மூன்று மாதங்களில் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பி அரிய சாதனை புரிந்திருக்கிறார்கள்.

இப்படி ஊர், உலகமெல்லாம் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற வேட்கை மிக்கவர்கள் சுமார் 35 பேர் இதற்கென ஒரு சங்கத்தையே நிறுவியுள்ளனர். 'உலகம் சுற்றுவோர் சங்கம்' (Globe trotters club) 1969ல் நிறுவப்பெற்றது. இதன் உறுப்பினர்கள் பலர் தமிழகத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் சுற்றிப் பார்த்தவர்கள். ஐரோப்பிய சுற்றுப் பயணத்தை மேற்கொண்ட நால்வரில் ஆர். லக்ஷ்மணன், ஜி. வி. வேணுகோபாலன், இந்தக் கோஷ்டியின் தலைவர் ஆர். சந்திரசேகர் ஆகிய மூவரும் பிரும்மசாரிகள். நான்காவது நபர் பி.வி.எச். பாபு மட்டும் திருமணமானவர்.

தங்கள் சுற்றுப் பயணத் திட்டத்தை வெளியிட்டதும், தாமதமின்றி மூன்று புதிய 'லாம்ப்ரெட்டா' ஸ்கூட்டர்கள் இவர்களுக்குக் கிடைத்தனவாம். (விலைக்குத்தான்!) இத்திட்டம் வெற்றிகரமாக அமையப் பல வகைகளிலும் உதவியவர் ஈசன் நிறுவனத்தைச் சேர்ந்த திரு எஸ். பி. கிருஷ்ணமூர்த்தி. இவர் ஏற்கனவே உலக நாடுகள் பலவற்றைச் சுற்றிப் பார்த்து அனுபவம் பெற்றவர். இச் சங்கத்தின் பொதுஜனத் தொடர்புச் செயலாளர். மேலும் விநோதமான இவர்கள் சுற்றுப் பயணத்துக்காகும் செலவுகளை ஈடுகட்ட 'சோ' ஓர் உதவி நாடகம் நடத்தித் தந்தார். பார்மாஷெல் நிறுவனத்தின் ஒத்துழைப்பும் கிட்டியது.

சுற்றுலா அணித் தலைவர் சந்திரசேகர் சொல்வதைக் கேட்போம் :

"ஏப்ரில் 21ம் தேதி பம்பாயிலிருந்து கப்பலில் கிளம்பி, எட்டு நாட்கள் பயணம் செய்து குவாயிட்டை அடைந்தோம். பாகிஸ்தான் வழியாகச் செல்ல முடியாததால், இந்த வழியில் செல்ல முடிவு செய்தோம். இக் கப்பல் பயணத்தை இப்போது நினைத்தாலும் கசப்பான உணர்வுதான் எழுகிறது. பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் மிகப் பழைமையான கப்பல். தண்ணீர் வசதி கிடையாது! பம்பாயிலிருந்து குவாயிட்டுக்கு ஒரு பயணிக்குக் கட்டணம் ரூ. 700. ஸ்கூட்டருக்குக் கட்டணம் ரூ. 300. கப்பலில் அளிக்கப்பட்ட உணவு படுமோசம்! பயணிகளில் பெரும்பாலோர் கேரள மக்கள். இந்த நூற்றாண்டில் இவ்வளவு வசதிக் குறைவான ஒரு கப்பல் சர்வீஸ் இருப்பது விந்தைதான்."

குவாயிட் பற்றி அவரிடம் விசாரிக்கிறேன்.

"குவாயிட்டில் யாருமே வருமான வரி செலுத்த வேண்டியதில்லை. அங்கு மதுவைக் கண்ணால் காண முடியாது! பூரண மதுவிலக்கு அமுலில் உள்ளது. செல்வம் கொழிக்கும் நாடு. மக்களில் பாதிப் பேர் அயல் நாட்டவர்கள். குவாயிட் பிரஜைகளுக்குச் சில விசேஷச் சலுகைகள் உண்டு. அயல் நாட்டுக்காரர் அங்கு ஒரு தொழிலைத் தொடங்க விரும்பினாலும், ஒரு சிறிய கடை வைத்து வியாபாரம் தொடங்கினாலும், ஒரு குவாயிட் பிரஜையின் பெயரில்தான் ஆரம்பிக்க வேண்டும். குவாயிட்காரர் தம் பெயரை வழங்குவார். அயல் நாட்டவர் மூலதனம் போட்டு உழைப்பார். லாபத்தில் 51 சதவிகிதம் குவாயிட் பிரஜைக்குப் போய்ச் சேரும்! அயல் நாட்டவர் அனைவருமே அங்கு இரண்டாந்தரப் பிரஜைதான்!

"குவாயிட்காரர் ஒருவர் ஒரே மாதிரியான அமைப்பில் மூன்று வீடுகள் கட்டியிருந்தால் அவருக்கு





மூன்று மனைவிகள் உள்ளனர் என்று வைக்கலாம். பெட்ரோல் கொள்ளை மலிவு. லிட்டர் 35 காசுகள். எல்லா நாட்டு நாணயங்களும் கரன்ஸி நோட்டுக்களும் அங்கு எளிதில் கிடைக்கின்றன. வெற்றிலை பாக்குக் கடைகளில் நாம் சாமான் வாங்குகிற மாதிரி அயல் நாட்டு நாணயங்களை எங்கு வேண்டுமானாலும் எளிதில் வாங்கலாம். ரூ. 34 கொடுத்தால் ஒரு பவுன் வாங்கலாம். பெருட்டில் அயல் நாட்டுக்கரன்ஸி நோட்டுக்களைக் கூடையில் நிளித்துத் தலையில் வைத்துக்கொண்டு வீதியில் விற்பனை செய்வதுண்டாம்! வெள்ளிக் கிழமை வார விடுமுறை. உஷ்ணம் மிக அதிகம். 130 டிகிரி சர்வ சாதாரணம். எனவே எல்லா வீடுகளும் ஏர்கண்டிஷன்செய்யப்பட்டுள்ளன. கார்களும் கூடத்தான்! டெலிவிஷன் இல்லாத வீடே இல்லை. ஆண்கள் யாரும் அரை நிஜார் அணிந்து வெளியே செல்லக் கூடாது. மே மாதம் 2ந் தேதி அங்கிருந்து கிளம்பி, கடுமையான வெய்யிலில் 180 கிலோமீட்டர் ஸ்கூட்டரில் சென்று பாஸ்ராவை அடைந்தோம். நடுவழியில் கொளுத்தும் வெய்யிலில் தங்கி இளைப்பாற நிழலே கிடையாது. 60 கிலோமீட்டர் பயணம் செய்த பிறகுதான் தங்குமிடம் கிடைத்தது. மே 4ந் தேதி பாக்தாதை அடைந்தோம். அங்கிருந்து ஸ்கூட்டரிலேயே இஸ்தான்புல் போய்ச் சேரவிரும்பினோம். ஆனால் அந்தத் திட்டத்தைக் கைவிடும்படி ஆயிற்று.''

''ஏன்?''





மூன் பக்கம்: 1. ஸ்கூட்டரில் லண்டன் வரை புறப்பட்ட நால்வரோடு நண்பர்கள்.
2. எஸ். பி. கிருஷ்ணமூர்த்தி.
3. பல்கேரியாவில் ஒரு சிலை.

இந்தப் பக்கம்: 1. புடாபெஸ்டில் ஒரு தோற்றம்.
2. இஸ்தான்புல் நகரம்.
3. யூகோஸ்லேவியாவில் ஒரு காட்சி.

''வழியில் கொலை, கொள்ளைகள் நிகழக் கூடுமென்று ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த சில பயணிகள் எங்களை எச்சரித்தார்கள். அரசியல் சூழ்நிலையும் ஸ்கூட்டரில் பயணம் செய்யச் சாதகமாயில்லை என்று அறிந்தோம். ஆகவே, ரயிலில் ஸ்கூட்டர்களையும் ஏற்றிவிட்டு நாங்களும் பயணம் செய்தோம்.

''உஸ்குடார் ரயில் நிலையத்தில் இறங்கினோம். இஸ்தான்புல் நகரின் ஆசியப் பகுதிக்கு 'ஹைதர் பாஷா' என்று பெயர். நகரின் குறுக்கே செல்லும் பாஸ்பரஸ் கால்வாயைத் தோணியின் மூலம் கடந்து மறு கரையை அடைந்தால் இஸ்தான்புல் நகரில் அடியெடுத்து வைக்கிறோம். பத்தே நிமிடங்களில் ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக்கும் ஐரோப்பாவிலிருந்து ஆசியாவுக்கும் செல்லும்



வாய்ப்பினை இந்நகரந்தான் அளிக்கிறது. துருக்கியில் மேலை நாட்டு நாகரிகத்தைக் காண்கிறோம். மினி ஸ்கர்ட்... இத்தியாதி. அங்குள்ள டோப்காபி மியூசியம் பிரமிப்பூட்டுகிறது. ஆட்டோமான் சாம்ராஜ்யத்தை ஆண்ட மன்னர்களின் நகைகள், அவர்கள் உபயோகித்த வண்டிகள் முதலிய பொருட்களைச் சேகரித்துக் காட்சிக்கு வைத்துள்ளனர். கண்ணைக் கூசச் செய்யும் அந்த வைரங்களும் ரத்தினங்களும் கோடிக் கணக்கான ரூபாய்கள் விலைமதிப்புள்ளவை.

''மே 8ந்தேதி துருக்கியிலிருந்து புறப்பட்டு 11ந் தேதி பல்கேரியத் தலைநகர் சோபியாவை அடைந்தோம். பல்கேரியாவில் உள்ள ஹோட்டல்கள் எல்லாம் அரசாங்கத்தினரால் நடத்தப்படுபவை. அங்குள்ள ஹோட்டல்களும்சொற்பமே. நாங்கள் தங்கிய

ஹோட்டலின் பெயர் சேர்நிகா. ஹோட்டலில் சாப்பிடுவதாயிருந்தால் கட்டுபடியாகாது என்று தோன்றியது. மின் அடுப்புகளைக் கேட்டு வாங்கிக் கொண்டு ஹோட்டல் நிர்வாகிகளுக்குத் தெரியாமல் ரகசியமாக நாங்களே சமைத்துச் சாப்பிட்டு விட்டோம். அறையில் சமைப்பது வெளியாயிருந்தால் நிர்வாகிகள் எங்களைத் தாட்சிண்யமின்றி வெளியேற்றியிருப்பார்கள்!

"யூகோஸ்லோவியாவிலுள்ள டிட்டோ-கிராட் நகருக்குச் செல்லும் வழியில் டச்சுக்காரரான டாக்டர் கிபான்ட், அவரது மனைவி இருவரையும் சந்தித்தோம். தங்கள் ஹாலந்து முகவரியைத் தந்து, அவர்கள் நாட்டுக்கு வரும்போது தங்களுடன் வந்து தங்கும்படி கேட்டுக் கொண்டார்கள். ஸ்கூட்டரிலேயே பல நாடுகளுக்குச் சென்று வர முற்பட்ட துணிவு அவர்களுக்கு மகிழ்ச்சி அளித்திருக்க வேண்டும். டிட்டோகிராடிலிருந்து டுப்ரோவ்னிக் 250 கிலோமீட்டர். அருமையான சாலை. உயரமான மலைச் சரிவிலிருந்து இறங்கிக் கடற்கரையை ஒட்டி ஓடுவதாக அமைந்துள்ளது. டுப்ரோவ்னிக் ஓர் அழகான கோடை வாசஸ்தலம். யூகோஸ்லோவியாவில் எங்களுக்குப் பொதுவாக நல்ல வரவேற்பு இருந்ததை உணர்ந்தோம். இந்தியாவிடம் அவர்களுக்குள்ள நல்லுணர்வுக்கு எடுத்துக்காட்டாக இருந்தது அவர்களின் அன்பு.

"17ந் தேதி இத்தாலியின் கிழக்குக் கரையில் அமைந்துள்ள துறைமுகப்பட்டினமான 'பாரி'யை அடைந்தோம். இரண்டு நாட்கள் அங்கு தங்கிவிட்டுப் பயணத்தைத் தொடர்ந்தபோது..." இந்த இடத்தில் சந்திரசேகர் ஒரு கணம் நிறுத்திவிட்டு வரலாற்றைத் தொடர்கிறார்: "செபிருல்லா என்னுமிடத்திலிருந்து பத்தாவது கிலோமீட்டரில் நான் ஒரு விபத்துக்குள்ளானேன். மிகுதியான சோர்வினால் தளர்ச்சியடைந்திருந்த நான் சாலையோரம் இருந்த கைப்பிடிக் கம்பிகளின்மீது வண்டியை மோதிவிட்டேன்! ஒரு மிஷன் ஆஸ்பத்திரியில் ஐந்து நாட்கள் தங்கியிருந்து சிகிச்சை பெற்றேன். புறப்படும்போது ரூ. 1200க்கு 'பில்' கொடுத்தார்கள். அவ்வளவு பெரிய தொகைக்கு எங்கே போவது? என் நிலைமையைப் புரிந்து கொண்ட மருத்துவ மனை நிர்வாகிகள், "இப்போது பணமில்லாவிட்டால் கவலைப்படாதீர்கள். ஊருக்குத் திரும்பிப்போன பிறகு சாவகாசமாக அனுப்புங்கள், போதும்!" என்று கூறி விடை தந்தார்கள். எங்களிடம் அவர்கள் காண்பித்த பெருந்தன்மைக்கும் நம்பிக்கை உணர்வுக்கும் நன்றி கூறிக் கிளம்பினோம். விபத்துக்குள்ளாகிப் பிழைத்த எனக்கு அதன் பிறகு ஸ்கூட்டரில் 'பில்லியன்' சவாரி செய்யும் பாக்கியந்தான் கிடைத்தது!

"சாவதற்கு முன்னால் நேப்பிள்ஸை ஒரு முறை பார்த்துவிடு" என்பார்கள். அதையும், சரித்திரப் புகழ்பெற்ற பாம்ப்பே நகரையும் பார்த்துவிட்டு இத்தாலியின் தலைநகரான ரோமுக்குச் சென்றோம். பைசா நகரச் சாய்ந்த கோபுரத்தையும் விட்டுவைக்கவில்லை. பிறகு ஜினிவா. செயின்ட் பெர்னார்ட் டன்னல் இத்தாலியையும் ஸ்விட்சர்லாந்தையும் இணைக்கிறது. ஆறு கிலோமீட்டர் நீளமுள்ள இப்பாதையை ஆல்ப்ஸ் மலையைக் குடைந்து அமைத்துள்ளனர். கடல் மட்டத்திலிருந்து சுமார் 8000 அடி உயரத்தில் அமைந்துள்ள இச்சுரங்கப் பாதையில் செல்லும்போது 'ஜில்'லென்று குளிர் அடிக்கிறது.

"ஜினிவாவிலிருந்து பாரிஸ்; அப்புறம் பிரிட்டன். டோவர் துறைமுகத்துக்கு வந்து சேர்ந்ததும் ஒரு புதிய பிரச்னை தோன்றியது. பிரிட்டனுக்குள் நுழைய நாங்கள் முன்னதாக 'விசா' வாங்கியிருக்கவில்லை. அங்குள்ள இந்திய தூதுவரகத்தின் உதவியை நாடினோம். ஆனால், அவர்களிடமிருந்து உதவி ஏதும் கிட்டவில்லை! உதவும் மனப் பக்குவம் அவர்களுக்கு இல்லாதது எங்களுக்கு ஏமாற்றத்தையே அளித்தது. மூன்று மணி நேரம் டோவரில் எங்களைச் சரமாரியாகக் கேள்விகள் கேட்டுத் துருவி ஆராய்ந்தபிறகு பிரிட்டிஷ் அதிகாரிகள் அந்நாட்டில் முப்பது நாட்கள் தங்குவதற்கு அனுமதியளித்தார்கள். பிரிட்டனில் நாங்கள் நால்வரும் எந்த உத்தியோகத்தையும் ஏற்பதில்லை என்ற வாக்குறுதியையும் பெற்றுக் கொண்டார்கள்!

"பி.பி.ஸி. எங்கள் வருகையை ஒலிபரப்பியதுடன் எங்களைப் பேட்டி கண்டு அந்நிகழ்ச்சியை ஒலிபரப்பி எங்களுக்குப் பத்து பவுன் சன்மானமும் அளித்தது. பி.பி.ஸி.யின் டெலிவிஷன் நிகழ்ச்சிகள் மிகச் சிறப்பானவை. பங்களாதேஷ் நிலவரம் பற்றி நாம் இங்கு தெரிந்து கொள்ளும் விஷயங்களை விட அங்கு அதிகமாகவும் தெளிவாகவும் டெலிவிஷன் காட்சிகள் மூலம் புரிந்துகொள்ள முடிகிறது.

"பிரிட்டனிலிருந்து ஹாலந்துக்குச் சென்று ஏற்கனவேயே எங்களுக்கு அறிமுகமாயிருந்த டாக்டர் கிபான்ட் தம்பதியினரின் விருந்தாளிகளாகத் தங்கினோம். பான், ஃபிராங்க்ஃபர்ட், வியன்னா நகரங்களையெல்லாம் பார்த்துவிட்டுபுடாபெஸ்ட்டை அடைந்தோம். பின்னர், சென்ற வழியாகவே நாடு திரும்பினோம். தொண்ணூறு நாட்களுக்குப் பிறகு. ஜெர்மன் எல்லையில் பிளாட்டிங் என்ற கிராமத்தில் கிடைத்த ஓர் அனுபவம் குறிப்பிடத்தக்கது.

"இரவு ஏழு மணிக்கு அந்தக் கிராமத்தை அடைந்ததும் ஸ்கூட்டர்களை ஒரு ஹோட்டலுக்கெதிரில் நிறுத்தினோம். ஒரு வயோதிகர் எங்களை அணுகி, 'உங்கள் வண்டிகளை என்னுடைய காரேஜில் விட்டு வைக்கலாம்' என்று கூறினார். நாங்கள் அவர் அளித்த வசதியை ஏற்றுக் கொண்டு அவர் குறிப்பிட்ட இடத்தில் வண்டிகளை நிறுத்திவிட்டுப் படுக்கச் சென்றோம். காலையில் 6-30க்கு அவர் எங்களைத் தேடிவந்து, 'வசதியாக உறங்கினீர்களா?' என்று விசாரித்தார். அவர் அன்புக்கு நன்றி கூறி விடைபெறுகையில் 'சற்றுப்பொறுங்கள்' என்று கூறிவிட்டு அந்த முதியவர் அருகிலிருந்த ஒரு கடைக்கு விரைந்தார். சற்றைக்கெல்லாம் திரும்பி வந்து, எங்களிடம் சில தொண்டை மாத்திரை (Lozenges) களையும் ஒவ்வொருவருக்கும் ஒரு 'மார்க்' நாணயத்தையும் அன்பளிப்பாக வழங்கி விடைகொடுத்தார். முன்பின் தெரியாத ஒருவரின் இத்தூய அன்புக்கு விலை ஏது?" என்று முடித்தார் உலகின் ஒரு பகுதியைச் சுற்றி வந்த அன்பர் சந்திரசேகர்.

பேட்டி: பாணன்

**ரேடியோவின்
சிறந்த
கட்டங்களுக்கு**

# எஸ்ட்ரெலாவின்
# சிறந்த ரேடியோ பேட்டரிகள்

காகித, பிளாஸ்டிக், உலோகக் கவச உறைகளிட்ட பேட்டரி வகைகள் உள்ளன, நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை அவை. நெடுங்கால உழைப்பிலும் இடையறாத சக்தியை வழங்குபவை. உங்கள் டிரான்ஸிஸ்டர் ரேடியோவின் மூலம் உங்கள் செவியின்பத்தைப் பெருக்கத் தலைசிறந்த பேட்டரிகள் — எஸ்ட்ரெலா.



**இலவசம்!**

திரைப்படங்கள், இசை,
விளையாட்டு, பொழுதுபோக்கு
ஆகியவற்றை அடங்கிய
மாதாந்திர செய்திப் பத்திரிகை

ஃபார்ச்சூன் ரேடியோ
லிஸனர்ஸ் கிளப்,
ஆதரவாளர்கள்: எஸ்ட்ரெலா
பேட்டரீஸ் லிமிடெட்
P.B. No. 139, பம்பாய்.



**எஸ்ட்ரெலா**
பேட்டரிகள்
**அதிக சக்தி
அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட்,
பம்பாய்-19.

FOCUS W-32- K TM

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராஜி



















நால்வரும் இளவரசியைக் கண் இமைக்காமல் கட்டிக் காத்தார்கள்.
ஆ...ஹா! மந்திரவாதியின் தந்திரத்திறம்! நள்ளிரவில் நால்வரும் தங்களை மறந்து உறங்கிப் போனார்கள்.


குண்டோதரா, கெட்டடையா! மோசம் போனோம். இளவரசியைக் காணோம் எழுந்திருங்கள்...


தாபப் படாதே விக்ரமா. அவன் இளவரசியை எங்கு ஒளித்து வைத்திருந்தாலும் இதோ ஒரு நொடியில் கண்டு பிடித்து... ஆ... இதோ தெரிகிறது...


...இங்கிருந்து இருநூறு காதங்களுக்கு அப்பால் இருள் சூழ்ந்திருக்கும் கானகத்தின் நடுவே ஒரு மலை. அதன் உச்சியில் பாறை இடுக்கினிடையே ஓர் ஒளி வீசும் வைரம்... அதுவே இளவரசி.


இதோ ஒரு நொடியில் அந்த இருநூறு காதங்களையும் கடந்து போய் அந்த வைரத்தைக் கொண்டு வருகிறேன், இளவரசே. கவலை வேண்டாம்.


பொட்டையன் வழிகாட்ட நெட்டையன் குறிப்பிட்ட குன்றை நோக்கிப் பாய்ந்து போகிறான்.


அண்ணே, இந்த மலை மீது ஏறி வைரத்தைத் தேட நேரமில்லை. உன் பார்வையின் சக்தியால் இந்த மலையைத் தூளாக்கு. ஒளி வைரம் உருண்டு விழும். நான் பிடித்துக் கொள்ளுகிறேன்.


இதோ... இதுதானே நீ குறிப்பிட்ட ஒளி வைரம்...?
36
ஆம், அதுவே தான் ஜாக்கிரதை.


போன வேகத்துடனேயே திரும்பினார்கள் இருவரும்...
விக்ரமா, இதோ வைரம். இதனுள் இளவரசி இருக்கிறாள்.
சீக்கிரம்... விடியப் போகிறது. அந்த வைரத்தைத் தரையில் வீசு. தாமதிக்காதே. மந்திரவாதி வந்து விடுவான்.


ஆ! இளவரசி எப்படி இங்கு வந்தாள்? ஆச்சரியமாக இருக்கிறதே. என் மந்திரத்துக்கும் மிஞ்சிய திறமைசாலிகளா?


என்ன மந்திரவாதியாரே! திகைப்பாக இருக்கிறதா இளவரசியைப் பார்த்து?
என் இரண்டாவது பட்டையும் தெறித்து விழுகிறது. அவர்கள் வெற்றி என் பக்கத்தில் இன்னொரு பகைக்குப் பலி வாங்கிக் கொண்டதே, ஐயோ!

தொடரும்







# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத அளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றிவிடுகிறது. இத்தகைய நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே! அதன் மிகச்சிறந்த பெப்பர்மிண்ட் சுவையுடன்— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!







தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே... உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!

DC.G.42TH

# சென்ட்ரல்

பி.வி.ஆர்

சிவலோகம், வைகுண்டம், பிரும்ம லோகம் போன்ற ஸ்டேஷன்களுக்கு ரயில் விட்டால் நன்றாக இருக்கும்.
- உபந்நியாசத்தில் ஒரு நாக்

## அத்தியாயம் 18

மேரி சென்றதும் மங்களா தனக்குள்ளேயே லயித்துப் போனுள். அவளுக்கு எல்லாமே விசித்திரமாக இருந்தது. அவளுடைய வாழ்க்கையில் காதலா? மேரி சொல்லி அவள் புரிந்து கொள்ளுகிருள்! காதல் என்ருல் என்ன?

இலக்கிய இலக்கண வியவகாரத்தில் அவளுடைய மனம் செல்லவில்லை. கேதாரம் அவளுடைய உள்ளத்தை ஈர்த்து விட்டிருக்கிருன். வெளியே அவள் இதை ஒத்துக் கொள்ள மறுத்த போதிலும், அவளுடைய இதய அந்தரங்கம் அதை நினைத்து வெட்கத்திலும் மகிழ்ச்சியிலும் திளைத்தது. ஆனல், அதே சமயத்தில் வேதனையும் பிறந்தது. அவளுடைய மனத்தில் கேதாரம் குடி புகுந்துவிட்டால் மட்டும் போதுமா? அவளுடைய கனவுகள் அவளுள் மட்டும் தோன்றினல் போதுமா? கேதாரம் கல்யாணம் செய்து கொள்ளுவதற்காகவே பம்பாயிலிருந்து வந்திருக்கிருன். ஜம்புநாதன் அவனுக்காகப் பெரிய பெரிய இடங்களில் பெண் பார்த்து வைத்திருக்கிருர். 'பெண் பார்க்கும் வாரமாக'வே இந்த வாரத்தை அவர் விழாவாகக் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிருர். மணி சொல்லுவது போல், ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கிற என்ஜினீயர் மருமகனை வைத்துக் கொண்டு, மாமா வியாபாரமே செய்கிருர். திங்கட்கிழமை அபிதத்தைப் பார்த்தாகிவிட்டது. திட்டப்படி கேதாரம் புதன்கிழமையன்று இராம்ப்டன் என்ஜினீயர் பெண்ணைப் பார்க்கச் செல்ல வேண்டும். ஆனல் அதற்குள், இன்று செவ்வாய்க்கிழமை காலையிலேயே நேற்றுப் பார்த்த பெண் அபிதம் கேதாரத்தைத் தேடிக்கொண்டு வந்திருக்கிருள். அவள் எதற்காக வந்திருப்பாள்? கேதாரம் தன் சம்மதத்தைத் தெரிவித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அபிதத்துக்கு அவனுடைய அறையில் என்ன வேலை?

கண்டிப்பாக அபிதத்தின் கழுத்தில் கேதாரம் தாலி கட்டப் போகிருன்!

மங்களாவுக்கு அழுகை வந்தது! சற்றுமுன்தான் மேரி அவளுடைய மனத்தின் ரகசியத்தை அவளுக்கே உணர்த்திவிட்டுப் போனுள். அந்த ரகசியத்துக்குக் காதல் என்று பெயர் வைத்தாள். மங்களா அந்த உணர்ச்சியில் மெய்ம் மறந்து போனுள். மத்தியானம் மூன்று மணிக்குக் கேதாரத்தை, எட்மண்ட் வேலை விஷயமாகச் சந்திக்கலாம் என்றும் சொன்னுள்.

ஆனல் எப்படிப் போவது? எவ்வாறு கேதாரத்தை அணுகிப் பேசுவது? அவன் அபிதத்தைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவன்! அவனுக்கும் அவளுக்கும் எந்தவிதமான தொடர்பும் இது வரையில் ஏற்பட்டதில்லை. தற்செயலாக நேர்ந்த அறிமுகம். அதிலிருந்து பிறந்த ஒருவிதப் பழக்கம். இதை ஆதாரமாக வைத்துக் கொண்டு, அவளால் எட்மண்டுக்காக அவனிடம் பொரிகக்குச் செல்ல முடியுமா?

கடிகாரத்தைப் பார்த்தான். ஒன்று அடிக்க ஐந்து நிமிடங்கள். அவளுக்கு 'டியூட்டி' முடியப் போகிறது. அவளுக்குப் பிறகு தாமோதரன் என்கொயரி கவுண்டரில் பணி ஏற்க வேண்டும். அவள் சுற்றுமுற்றும் பார்த்தாள். டில்லி கவுண்டரில் இருக்கும் சுசீலாவுடன் அவன் சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தான். என்றும் அணையாத சிகரெட் விரலில் விளையாடிக் கொண்டிருந்தது.

சுசீலா — தாமோதரனைப் பார்த்த போது அவளுக்கு ஒருவித பொருமையும், அதே சமயத்தில் ஆறுதலும் உண்டாயின.

மூன்று வருடங்களுக்குமுன், சுசீலா ரயில்வேயில் சேர்ந்த புதிதில் தாமோதரன் தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவளுடைய காலடியில் கொட்டினுன். சுசீலா என்கிற காதல் தேவதைக்குத் தன்னையே பலி கொடுக்கத் தயாராக இருந்தான். சீஃப் புக்கிங் கிளார்க் ரங்காச்சாரி அவனுடைய மன நிலையை அறிந்து சுசீலாவை அவனிடமே பயிற்சிக்கு ஒப்படைத்தார். வைரக் கடுக்கன் ரங்காச்சாரி நல்ல மனிதர். தாம்

கல்யாணம் செய்து கொள்ளாமற் போனாலும், பிறர் திருமணம் செய்து கொள்ளுவதை, அதுவும் காதல் விவாகம் செய்து கொள்ளுவதை வரவேற்கிறவர். அதற்காக உதவியும் செய்கிறவர். தாமோதரனையும் சுசீலாவையும் தனித் தனியே அழைத்து, அவரவர்களுடைய மனத்தை விசாரிந்து அறிந்து கொண்டார் ரங்காச்சாரி.

மூன்று மாதங்களில் சுசீலாவுக்கு, வேலையில் தேர்ச்சி உண்டாயிற்றோ என்னவோ, காதல் பரீட்சையில் முதல் மார்க் வாங்கினாள்.

ஒரு கொள்கையாகக் கடைப்பிடித்து வந்தாள்.

ஒரு சித்திரையில் ஆரம்பித்த பழக்கம் காதலாக மலர்ந்தது ஆடியில். ஆவணியில் கல்யாணம் நடக்கும் என்று எல்லாரும் எதிர்பார்த்தார்கள். நடக்கவில்லை. புரட்டாசி மாதத்தில் தாமோதரனுடைய தாத்தா, பேரனின் காதலையும் கல்யாணத் இட்டத்தையும் அறிந்து கொள்ளாமல் சிவலோகப் பிராப்தி அடைந்தார். அவர் சிவலோகத்துக்கு டிக்கட் வாங்கும்போது பேசாமல் இருந்திருக்கலாம். அவருடைய பிரயாணத்துக்கு



தாமோதரன் புடவைகளாகவும், மோதிரங்களாகவும் கடிகாரங்களாகவும் பரிசுகளை அள்ளிக் கொட்டினான். சுசீலா எதையும் வேண்டாம் என்று சொல்லவில்லை. பரிசுகள் மூலமாகத்தான் காதலைத் தெரிவிக்க வேண்டும் என்று தாமோதரன் நினைத்தது போல அவள் நினைக்கவில்லை. வெறும் புன்னகையாலும் பேச்சாலுமே தன் காதலைக் காட்டிவிடலாம் என்று நினைத்து அதை


LIFEBUOY
for health
LIFEBUOY SOAP
லைப்பாய்
இருக்குமிடம்: அதுவே
ஆரோக்கியம்
இருக்குமிடம்
லைப்பாய் ஸ்நானம்-
பொழுதெல்லாம் தூய்மை-
புத்துணர்வோடு புதுமைப்
பொலிவு... பூரிக்கும் ஆரோக்கிய
நல்வாழ்வு- அளிப்பது லைப்பாய்.
அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது
லைப்பாய்
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

வழி அனுப்புவதற்காக ஆக்ராவிலிருந்து வந்த ஒரே பெண்ணையும், கிழத்தின் பிரயாணத்தைத் தினம் தினம் தூங்கி எழுந்திருக்கும் போதெல்லாம் எதிர்பார்த்திருந்த ஒரே பிள்ளையையும், தம் இரு பக்கங்களிலும் வைத்துக் கொண்டு அவர்களிடம் தம் கடைசி அதிகாரத்தைக் காட்டினார். பெண்ணின் ஒரே பெண்ணை, பிள்ளையின் ஒரே பிள்ளை கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கடைசி ஆசை.




தாமோதரனுடைய தாத்தா இந்த உலகத்திலிருந்து புறப்பட்டுச் சிவலோகம் ஸ்டேஷனை அடைவதற்குள், அவனுடைய காதல் ரயில் தடம் புரண்டு, பாலத்திலிருந்து இறங்கி நதியில் விழுந்து சமுத்திரத்தை நோக்கிச் சென்றது.

தங்கை புருஷன் பணக்காரர் என்பதையோ, அவருக்குப் பிறகு அவருடைய சொத்தெல்லாம் மருமகள்மூலமாகத் தம் பிள்ளை தாமோதரனுக்குத் தான் வரும் என்பதையோ அவனுடைய அப்பா மறக்கவில்லை. ஏற்கனவே தாயாரை இழந்த தாமோதரனுக்குத் தன் பெண் வாழ்க்கைப்பட்டால், மாப்பிள்ளையைத் தன் வீட்டோடு வைத்துக் கொள்ளலாம், பெண் தன்னைவிட்டு என்றென்றும் போகமாட்டாள் என்ற சௌகரியங்களை அலசிப் பார்க்கப் பெண்ணின் தாயார் தவறவில்லை. ஆக்ராவில் அவருடைய கணவர் ரிடையரான பிறகு, சென்னைக்குத் திரும்பி வந்த பிறகு கல்யாணத்தை நடத்தி விடலாம் என்று அவர்கள், தந்தையின் பால்சடங்கு முடிவதற்குள்ளேயே தீர்மானம் செய்தார்கள்.

தாமோதரன் என்ன பாடுபட்டானோ, எப்படிப் புழுவாய்த் துடித்தானோ தெரியாது. அத்தை பெண் கழுத்தில் தாலியைக் கட்டினான். அப்போது அவனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. சுசீலா அவனுடைய மனக் கண்முன் தோன்றினாள்! அவளுக்காக அவன் கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய்க்குப் பரிசுகளாகவும், பீச்மெல்பா டுட்டி ப்ருட்டிக்களாகவும் கொட்டியிருக்கிறானே! எல்லாம் தண்டமாகப் போயிற்றே! அந்த ஆயிரம் ரூபாயை நினைத்து அவன் கண்ணீர் சுரந்தான். அவனைச் சூழ்ந்து கொண்டிருந்தவர்கள் அனைவரும் ஓம குண்டத்தின் புகையில் மாப்பிள்ளை அவதிப்படுகிறான் என்று நினைத்தார்கள்.

கல்யாணத்துக்குச் சுசீலா, அமிர்தம், மேரி, மங்களா முதலானவர்களுடன் போனாள். அமிர்தத்துக்கு எப்போதுமே கொஞ்சம் வாய்த்துடுக்கு. "ஏன், சுசீலா, பரிசு ஏதும் வாங்கி வரவில்லையா?" என்று கேட்டாள். "ஊஹூம்!" என்று அவள் உதட்டாலேயே பதிலளித்தாள். அமிர்தம் விடவில்லை. "அவன் நிறையத் தந்தானே. பாவம்!" என்றாள். அதற்குச் சுசீலா சிரித்துக் கொண்டே பதில் சொன்னாள். "தாமோதரன் ஒரு பைத்தியம்மா! பித்துக்குளி. அவன் தந்ததை யெல்லாம் வாங்கி வைத்துக் கொண்டேன். என்னை நானே ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டேன்."

அமிர்தம் மேலே ஏதும் பேசவில்லை. ஆனால் உடன் இருந்த வைரக் கடுக்கன் ரங்காச்சாரி சொன்னார்: "சுசீலா சொல்றது சரிதான். என்கிட்டேயே சொன்னாள், வேலை செய்து பிழைத்த தான் கல்யாணம் செய்து கொண்டால் தாயாரும், தங்கை தம்பிகளும் தெருவில் நிற்க வேண்டியிருக்கும் என்று. ஆனால் தாமோதரனுக்கு ஸ்க்ரூ லூஸாப் போயிருந்தது. சுசீலாகிட்டே நான் தான் சொன்னேன், விளையாட்டு முடியற மட்டும் நடக்கட்டும், 'நீ ஜாக்கிரதையாகவே இருன்னு. ஆனால், தாமோதரனை நினைச்சு யாரும் பயப்படவே வேண்டாம். இதோ இந்தக் கட்டின பெண்டாட்டியைக்கூட அவன் நாளைக்குத் தொடவும் பயப்படுவான்! அவனுக்குப் பரிசுகள் வாங்கிக் கொடுக்கத்தான் தெரியும்."

கல்யாணத்துக்குப் பிறகும் சுசீலாவுடன் அவன் தினமும் பேசிக் கொண்டிருப்பான். ஆனால் பேச்செல்லாம் இல்லறத்தைப் பற்றி. அவளைக் கிண்

டல் செய்து இண்டல் செய்து எல்லாரையும் சிரிக்க வைப்பாள் சுசிலா. பெண்டாட்டி புடவைக்கு அவன் இஸ்திரிபோட்ட கதையை அவனுடைய வாயிலிருந்தே கொக்கி போட்டு இழுப்பாள் சுசிலா. அவனும் ஒன்றையும் விடாமல் சொல்லுவான்.

மங்களா மணியைப் பார்த்தாள். ஒன்று. தாமோதரன் இன்னும் பேசிக்கொண்டிருந்தான். சுசிலாவிடம் ஒருவேளை, தனக்குப் பிறந்திருக்கும் குழந்தையைப் பற்றி விவரிக்கிறானே!

''மிஸ்டர் தாமோதரன்!'' மங்களா கத்தினாள்.

''யெஸ், மிஸ் மங்களா! இதோ வந்துட்டேன்!''

'' சுசிலா, நீ இங்கே வந்து வேணுமானாலும் பேசு!''

மங்களாவுக்குப் பசிக்கவில்லை. காலையில் ஏழு மணிக்கு ஒரு தோசை, ஒரு கப் காப்பி சாப்பிட்டது. சாதாரணமாகப் பதினொரு மணிக்கே வயிற்றைக் கிள்ள ஆரம்பிக்கும். இன்று ஏன் பசிக்கவில்லை? யார் காரணம்?

கேதாரமா? அபீதமா?

அவனேதானா?

வீட்டுக்குப் போனால் கண்டிப்பாக அப்பா கத்துவார். சொல்லி அனுப்பியும் அவள் விருந்துக்கு வரவில்லை என்று கோபிப்பார். ஆனால் அவர் எப்படியும் ஒரு கத்தல் கத்தத்தான் போகிறார். அதை இப்போதே போய்க் கேட்டுக்கொள்ளுவானேன்!

திடீரென்று வைரக் கடுக்கன் ரங்காச்சாரியின் நினைவு வந்தது. அடுத்தகணம் நேரே அவரைத் தேடிக் கொண்டு சென்றாள்.

சீஃப் புக்கிங் கிளார்க் ரங்காச்சாரி, டெரினின் ஃபுல் கை ஷர்ட்டின் கஃப் லிங்க்ஸ் பளபளக்க, கடுக்கன்களின் வைரங்கள் ஜொலிக்க, சிரித்த முகத்துடன் உட்கார்ந்திருந்தார். மற்ற குமாஸ்தாக்கள், ரயில்வே தலைமையகக் கான்டீனுக்குச் சென்றிருந்தார்கள்.

''குட் ஆஃப்டர் நூன் ஸார்!''

''வா, மங்களா, வா... உட்கார்... இப்பத்தான் இதையெல்லாம் எடுத்து மேஜையின் மேலே வைத்தேன்.... வா, நீயும் சாப்பிடு!''

ரங்காச்சாரியின் அமிர்தமாகக் கொட்டிய அன்பில் மங்களா நெகிழ்ந்து போனாள். கண் மேஜையின் மேல் இருந்ததைப் பார்த்தது. ரங்காச்சாரி, பொட்டணங்களைப் பிரித்துக் கொண்டிருந்தார். அவள் அவற்றைப் பார்க்கிறாள் என்பதை உணர்ந்ததும், ரங்காச்சாரி, ''வா அம்மா, உட்கார்..... பார்த்தசாரதி கோயில் சர்க்கரைப் பொங்கல்... திவ்யமாக இருக்கும்... டி. பி. கோயில் தெரு தெரியுமா, உனக்கு? அங்கே ஒரு பாட்டி இருக்கிறாள். காஞ்சிபுரம் இட்லி பண்ணறதில் தங்கப் பதக்கம் கொடுத்தால் அவளுக்குத்தான் கொடுக்கணும். தொட்டுக்க மிளகாய்ப் பொடி... உட்கார், உட்காரேன்.........''

மங்களா அருகே ஒரு ஸ்டூலில் அமர்ந்தாள்.

''எனக்குப் பசிக்கவேயில்லை, ஸார்! நீங்கள் சாப்பிடுங்கள்......''

''இதோ பார், மங்களா! இப்போ நீயே இங்கே வந்து விட்டாய். அதனாலே நான் இப்போ சொல்றதுகூட வெறும் வாய் வார்த்தையா, சமாளிக்கிற வார்த்தையா உனக்குத் தெரியும். பொய்ன்னுகூட நினைப்பே! உனக்கு நானே சொல்லியனுப்பணும்னு நினைச்சண்டிருந்தேன். என்னதான் சொல்லு, இந்தச் சர்க்கரைப் பொங்கல் புளியோதரை நாங்க அய்யங்கார்கள் பண்ற மாதிரி, உங்க ஸ்மார்த்தர்கள் பண்றதில்லை. என்ன சொல்லறே நீ?''

''வாஸ்தவம்தான்! ஆனால் அதுக்குக் காரணம், எங்களுக்குச் செய்ய வராது என்று இல்லை, ஸார்.''

''பின்னே?''

''சாப்பாட்டு விஷயத்தில் அநாவசியமாக எங்க மூளையைச் செலவு செய்யறதில்லை.....''

'' அப்போ... அய்யங்கார்களெல்லாம்....''

''நோ... நோ... நான் ஏதும் குறையாகச் சொல்ல வில்லை... தப்பா நினைத்துக் கொள்ளாதீர்கள்... ஒரே ஒரு வாய் கொடுங்கள்... பாதி இட்லிக்கு மேலே வேண்டாம்.... நான் இன்னும் சாப்பாடே சாப்பிடவில்லை....''

டிபன் பாக்ஸிலிருந்து, டிபன் பாக்ஸ் மூடிக்கு ஸ்பூனால் பொங்கலைத் தள்ளின ரங்காச்சாரி, ஸ்பூனையும் மூடியில் வைத்து மங்களாவின் பக்கம் வைத்தார்.

''ரொம்ப அதிகம், ஸார்....''

''சும்மா சாப்பிடு....''

ரங்காச்சாரியின் சிரித்த முகத்தைப் பார்த்த போது மங்களாவின் மனத்தில் திடீரென்று ஒரு வேதனை பிறந்தது. எவ்வளவு துயரங்களையும் துக்கங்களையும் மனத்தில் ஒளித்து வைத்துக் கொண்டு இப்படியே சிரிப்பில் வாழ்கிறார் இவர்.

''ஸார்! எனக்கு மனசே சரியில்லை.....''

அவளையும் அறியாமல் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவந்தன.

'' உன் மனசு சரியில்லேன்னா அதுக்கு நீயேதான் காரணமாக இருக்க



உ

ஓம்

ஸ்ரீ சற்குரு துணை

# ஆராதனை

## 9—1—1972

## ஞாயிற்றுக்கிழமை



கருத்துணர்ந்து கர்மானவர் செய்!
செயலிலுறும் செல்வம் சேர்க்காதே!

- ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

அடக்கமுடையார் அறிவிலரென்றெண்ணிக்
கடக்கக் கருத வேண்டாம்

- ஸத்குரு ஸ்ரீ குழந்தையானந்த ஸ்வாமிகள்

## ஸ்ரீமத் அகண்ட பரிபூரண ஸச்சிதானந்த கல்யாணகுண கம்பீர
# ஸ்ரீ சேஷாத்ரிநாத ஸத்குரு ஸ்வாமிகளின்
# 43-ம் ஆண்டு ஆராதனை மஹோத்ஸவப் பத்திரிகை

---

மெய்யன்புடையீர்,

கலி 4970 சுக்கில வருடம் தை மாதம் 11ந் தேதி கிருஷ்ணபக்ஷ ஷஷ்டி, ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காஞ்சியில் காமகோடியார் வம்சத்தில், பௌரகுத்ஸ கோத்திரத்தில் வரதராஜ ஜோஸியருக்கும் மரகதவல்லி அம்மையாருக்கும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் கருணையால் ஞானக்கனியாய்ப் பிறந்து, இளம் வயதிலேயே ஸ்ரீ தேவியின் பரிபூர்ண அனுக்ரஹம் அடைந்து, பின்பு தாயின் உபதேசத்தால் திருவண்ணாமலை வந்து சேர்ந்து, நாற்பது வருட காலம் ஊமை போலும், பித்தன் போலும், பற்றற்ற சுத்த அதிவர்ணாச்ரமியாய், பல தேவாம்சம் பொருந்திய திருவிளையாடல்களைச் செய்து தம் அருட் சக்தியால் பல பக்தர்களுக்கு இருள் இடர் நீக்கி, அருள் சுடர் ஆக்கி மெய்யறிவூட்டி நல்வழி காட்டியருளிய

**கல்யாணகுண கம்பீர ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்**

விபவஸ்ரீ மார்கழியீ கிருஷ்ண பக்ஷமும் நவமி திதியும் கூடிய சுபதினத்தில் மஹாஸமாதி எய்தினார்.

இருபத்தெட்டு ஆண்டுகளாக யோக பீடத்தின் மூலமாகவும், ஸூக்ஷ்மத்திலும் பக்தகோடிகளை ஆட்கொண்டருளும் ஸ்ரீ ஸத்குருநாதரின் ஆக்ஞைப்படி ஊஞ்சலூரில் ஸூக்ஷ்மயோக சமாதி வைதிக முறையில் அமைத்து, வருடந்தோறும் ஆராதனை வைபவங்கள் நடைபெற்று வருகின்றன. இவ்வருடம் சங்கத்தாரால் நடத்தப்படும் 29-வது ஆராதனை உத்ஸவம் நிகழும் விரோதிகிருது ஆண்டு மார்கழி மாதம் 20-ம் தேதி (4-1-72) செவ்வாய்க்கிழமை மஹோத்ஸவம் ஆரம்பித்து விரோதிகிருது ஆண்டு மார்கழி மாதம் 25-ம் தேதி (9-1-72) ஞாயிற்றுக்கிழமை ஆராதனை வைபவம் நடைபெறும்.

**பக்தர்கள் அனைவரும் வந்து ஈடுபட்டுக் குருபிரஸாதம் பெற்றுய்யக் கோருகிறோம்**

வழக்கம்போல் ஸ்ரீ ஸ்வாமிகளாலும் மற்ற மகனீயர்களாலும் அருட் கருவியின் மூலம் கதாகாலக்ஷேபங்களும், உபந்யாஸங்களும் நடைபெறும். வேத சாஸ்திர ஆகம சபைகள் நடைபெறும். விரிவான நிகழ்ச்சி விபரங்கள் தனியாக பிரசுரிக்கப்படும்.

ஊஞ்சலூர்
1—10—71

இப்படிக்கு,
E. S. சிவராமகிருஷ்ணன் — தலைவர்
K. V. சுப்பரத்னமய்யர் — உப-தலைவர்
P. S. கோபாலகிருஷ்ணன் — காரியதரிசி

---

குறிப்பு :
1. வெளியூர் அன்பர்களுக்கு இடவசதி உண்டு.
2. அதிஷ்டான அஸோஸியேஷன் ரசீது புத்தகங்கள் உள்ளவர்கள் வசூலிக்க அனுமதிபெற்றவர்கள்.
3. ஆராதனைக்கு நன்கொடையளிக்க விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

E.S. சிவராமகிருஷ்ணன், ஸ்ரீ சேஷாத்ரி நிலயம், டாடாபேட், 6-ம் வீதி, கோவை - 12.

---

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அதிஷ்டானம் அஸோஸியேஷன் (பதிவானது) ஊஞ்சலூர் (ஈரோடு வழி)

# அருமையான சுவை என்பது
## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு

# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குத்தான் எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன — புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




**பார்லே க்ளுகோ** பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குகின்றன

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

everest/4a/CDT am

முடியும். என்ன காரணம், சொல்லு'' என்று கேட்டார் ரங்காச்சாரி.

''எனக்கே புரியவில்லே.''

'' பிடிக்காத இடத்தில் கல்யாணம் நிச்சயம் செய்துவிட்டாரா, எஸ்.எஸ்?''

''அதெல்லாம் இல்லே, ஸார்.''

'' பிடிக்கிற இடத்தில் பண்ணக் கூடாது என்கிறளா, மிஸர்ஸ், எஸ். எஸ்.?''

''அம்மா எதுவும் சொல்லவில்லே !''

'' பின் ?''

'' ... ... .''

''மனசிலே ஒருவித சலனம் பிறந்திருக்கா.... நீயே யாரையாவது நினைச்சுக் கனவு கண்டுகொண்டிருக்கிறயா....? அந்த ஆள் வேறு ஒருத்திக்குத் 'தாலி கட்டுவான் போலிருக்கா....?''

'' காஞ்சிபுரம் இட்லி உண்மையாகவே நன்னயிருக்கு, ஸார்.''

'' நான் கேட்ட கேள்வி !''

'' இன்னும் கொஞ்சம் இட்டிலி எடுத்துக் கொள்றேன்.''

'' எடுத்துக்கோ... என்ன பதில் சொல்லாமல் இருக்கே....?''

மங்களா மௌனத்தில் உறைந்தாள்.

'' எனக்கு எல்லாம் புரிகிறது.''

'' ஸார் !''

''என்ன?''

''நீங்க ஏன் ஸார், எப்போதும் புல்ஸ்லீஹாண்ட் ஷர்ட்டே போட்டுக் கொள்ளுகிறீர்கள்?''

'' கதை கேட்கிறயா ?''

''சொல்லுங்கள், ஸார்.''

'' மணையிலே உட்கார்ந்து தாலி கட்டப் போனேன். திடீரென்று முழங்கையிலே ஒரு கத்தி விழுந்தது. தில்லானா மோகனாம்பாளிலே, சிவாஜி கணேசன் கையிலே ஒரு ரௌடி எறிந்தானே அது மாதிரி. என் மேலே எறிஞ்சவன் ரௌடிகளுக்கெல்லாம் ரௌடி. கல்யாணப் பெண்ணைப் பெற்றவன். என் ஒன்றுவிட்ட மாமா. குடிகாரன்...கேப்மாரி.... விட்டுத் தள்ளு. அந்தக் காயம் காரணமாக இரண்டு அங்குல

---

## இக்கட்டான நிலை விடுபட்ட கலை!

வக்கீல் யக்ஞராமன் அன்று ஊரிலிருந்து திரும்பி வந்தபோது இரு கல்யாணப் பெண்களின் தந்தைமார்கள் அவரைக் காணக் காத்திருந்தார்கள், கோபத்தோடு.

''ஸார்! ஞாயிற்றுக்கிழமை முகூர்த்தத்துக்கு மாம்பலம் கோவாபரேடிவ் சொஸைட்டி பில்டிங்கை என் பெண் கல்யாணத்துக்குக் கொடுப்பதாக 'அட்வான்ஸ்' வாங்கியிருக்கிறீர்கள். இவருக்கும் அதே தேதியில் முகூர்த்தத்துக்கு இடம் கொடுத்திருக்கிறீர்களே ?'' என்று குதித்தார் பெண்ணைப் பெற்றவர். மற்றொருவரும் இதையே சொல்லிச் சீறினர்.

வக்கீல் யக்ஞராமன் 1962-ம் வருஷத்தில் மாம்பலம் கோவாபரேடிவ் சொஸைட்டியின் காரியதரிசியாக இருந்தார். முதல் கல்யாணப் பெண்ணின் தந்தை 'அட்வான்ஸ்' கொடுத்ததை டைரியில் குறிக்க மறந்து விட்டார் வக்கீல் யக்ஞராமன். அவர் ஊருக்குச் சென்றிருந்த போது, அந்தத் தேதியில் குறிப்பு ஏதும் இல்லாததால் இன்னொருவருக்குக் கட்டடத்தைக் கல்யாணத்துக்கு 'அட்வான்ஸ்' வாங்கிக் கொண்டு கொடுத்து விட்டார்கள் !

'' யாராவது ஒருவர் பெரிய மனசு பண்ணித் தேதியையோ இடத்தையோ மாற்றிக் கொள்ள வேணும் !'' என்று கேட்டுக் கொண்டார் காரியதரிசி.

'' அதெப்படி ஐயா முடியும் ? எல்லா ஏற்பாடுகளும் செய்தாகி விட்டது !'' என்று 'இரட்டை நாதசுரம்' போல இரு குரல்களும் சேர்ந்து ஒலித்தன.

'' நல்லகாலம்; மாம்பலம் கோவாபரேடிவ் சொஸைட்டியில் மாடியும் கீழேயும் இரு இடங்கள் இருக்கின்றன. மாடியில் மாப்பிள்ளையை இறக்குவார்கள். நீங்கள் இடைஞ்சலைப் பொருட்படுத்தாமல் மாடியில் ஒரு கல்யாணமும், கீழ்த் தளத்தில் ஒரு திருமணமும் வைத்துக் கொண்டு விடுங்கள். கீழே உள்ள சமையலறையை இரண்டு பாகங்களாகப் பிரித்து இருவருக்கும் தந்துவிடுகிறேன். எப்படியோ சமாளித்துக் கல்யாணங்களை நடத்திவிடுங்கள் !'' என்று இரு கட்சிக்காரர்களுக்கும் சமரசம் செய்து வைப்பதுபோல் வக்கீல் யக்ஞராமன் எடுத்துரைத்தார்.

'' கல்யாணத்துக்கு மூன்று நாளே இருக்கு. இனி வேறு கல்யாண மண்டபம் பார்த்துச் சிரமப்படுவது இயலாது !'' என்று இருவருமே ஒப்புக் கொண்டனர் இந்த ஏற்பாட்டுக்கு.

''ஆளுக்குப் பாதிதான் கட்டட வாடகை தருவோம் என்று பிடிவாதம் பிடிக்காதீர்கள். சொஸைட்டிக்காவது லாபமாக இருக்கட்டும்!'' என்றார் திரு யக்ஞராமன் விட்டுக் கொடுக்காமல்.

பெண்ணைப் பெற்றவர்களுக்கு மலையான கல்யாணப் பிரச்னை இருக்கும்போது, இடப் பிரச்னை, பணப் பிரச்னை ஒன்றும் ஒரு பொருட்டாகத் தெரியவில்லை. எல்லாவற்றுக்கும் தலையாட்டி வைத்தார்கள்!

கிருஷ்ணகான சபையில் ஆலத்தூர் சகோதரர்களின் கச்சேரி ஏற்பாடாகி யிருந்தது. அந்தக் கச்சேரிக்கு வாசிக்கவிருந்த பிரபல மிருதங்க வித்வான் கடைசி நேரத்தில் 'உடல் நிலை அசௌக்கியம், வர இயலவில்லை!' என்று தந்தி கொடுத்து விட்டார்.

ஆலத்தூர் சகோதரர்களிடம், விஷயத்தைச் சொல்லி ''இரு இளம் மிருதங்க வித்வான்களைப் போடலா மென்றிருக்கிறேன்! உங்களுக்கு ஆட்சேபணை இல்லையே?'' என்றார் கிருஷ்ணகான சபையின் காரியதரிசி ஸ்ரீ யக்ஞராமன்.

'' நானே உங்களுடன் வந்து அந்த இரு இளம் மிருதங்க வித்வான்களையும் ஏற்பாடு செய்து தருகிறேன் !'' என்று புறப்பட்டுவிட்டார் ஆலத்தூர் ஸ்ரீ சுப்பையர்.

'' மறுநாள் ஆலத்தூர் கச்சேரி இரட்டை மிருதங்கத்துடன் ஜோராக நடந்தது. சங்கீதக் கச்சேரிகளில் அபூர்வமாக இப்படி இக்கட்டான நிலைகள் ஏற்படுகின்றன. அந்நிலையில் சங்கீத வித்வான்களின் பூரணமாக ஒத்துழைப்பு கொடுத்து உதவும் பண்பு எந்தவித இடைஞ்சலையும் சமாளித்துக் கச்சேரிகளை விக்னமின்றி நடத்த உதவுகிறது!'' என்று சொன்னார் ஸ்ரீ யக்ஞராமன். — குன்றிமணி



அகலத்துக்கு நாலு அங்குல நீளத்துக்கு ஒரு அசிங்கமான வடு... அதை மறைக்க ஃபுல் ஹாண்ட் ஷர்ட்.''

''கல்யாணம் ?''

''நடந்திருந்தால் நான் எப்படி இன்னும் பிரும்மச்சாரியா இருந்திருக்க முடியும் ?''

ரங்காச்சாரி சர்க்கரைப் பொங்கலை மறந்தார். கைவிரல்கள் வறண்டன.

'' அந்தப் பெண் ?''

'' அவளுடைய தலையில் காவேரி வெள்ளம் எழுதியிருந்தது. அவமானம் தாங்க முடியாமல் ஸ்ரீரங்கம் பாலத்திலிருந்து ஆடிப் பெருக்கில் குதித்தாள்.''

''எப்படி ஸார், உங்களால் அவளைக் கைவிட முடிந்தது ?''

''நானு கைவிட்டேன்? அவளைக் காப்பாத்தணும், அவளுடைய அம்மாவின் கண்ணீரைத் துடைக்கணும், ஒரு வீட்டையும், நகைகளையும் ரௌடி அப்பனிடமிருந்து காப்பாத்தணும்னு பதினெட்டு வயசிலேயே வைராக்கியமா தீர்மானம் செய்தேன். காவிரிப் பாசனத்திலே எனக்குப் பத்து வேலிக்கு இருந்தது. பெரிய பெரிய இடங்களிலிருந்து, என் தகப்பனாரின் பதவியையும், பணத்தையும் நினைச்சுப் பெண் தர வந்தார்கள்.... ஆனால் நான்.... ? தேசியக் கல்லூரியிலே பி. ஏ. படிக்கிறவன் படிப்பில்தானே நினைவாக இருக்க வேண்டும்? மாமியையும் அவள் பெண்ணையும் உய்விக்கிறதை லட்சியமாகக் கொண்டேன். அம்மா, அப்பா என் பேச்சைக் கேட்டதும் சிறி விழுந்தார்கள். ஆனால் என் குணம் ரொம்ப மோசமான குணம். நினைத்ததைச் சாதிக்கிற வரையில் தூங்காதவன். ஒரு சின்ன ஊரில், ஒரு சத்திரத்தில் கல்யாணத்துக்கு நானே ஏற்பாடு செய்தேன். அம்மா இல்லை, அப்பா இல்லை.. சொந்தக்காரக் கூட்டமே இல்லை..... தாலி கட்ட வேண்டியதுதான் பாக்கி... அதையும் கட்டியிருப்பேன், ஆனால் எதிர்பாராதவிதமாக ரௌடி மாமனார் வந்தான். பெண்ணை வேறு யாருக்கோ, ஒரு பணக்காரப் பிள்ளைக்கு அவன் ஏற்கனவே முடிவுபண்ணியாகி விட்டதாம். இது ஏற்கனவே தெரிந்ததுதான். ஆனால் அந்தப் பணக்காரப் பிள்ளை, இவனுடன் சேர்ந்து எல்லாச் சகவாசங்களிலும் ஈடுபட்டிருக்கிறவன். கல்யாணம் செய்து கொண்டால், ரங்கனைக் கல்யாணம் செய்து கொள்ளுவது என்று மூர்க்கத்தனமாக இருந்தாள் என் மாமா பெண்....

''கல்யாணம் இப்படித் தடைப்பட்ட பிறகு, நான் திருச்சியை விட்டு வெளியேறினேன். பெண்ணை இழுத்துக் கொண்டு அப்பன் போனதுதான் தெரியும். அதன்பின் ஆடிப் பதினெட்டில் அவளும் காவேரியோடு போனாள்.''

ரங்காச்சாரியின் கண்களிலிருந்து ஒரு பொட்டுக் கண்ணீர்கூட வரவில்லை. முகமே களங்கமற்ற வானமாகத் தோன்றியது.

''பேச்சுச் சுவாரசியத்தில் நான் டிபனை மறந்துவிட்டேன்'' என்றார், அவர் திடீரென்று.

''ஆனால் எப்படி இதையெல்லாம் தாங்கிக் கொண்டு, சிரிச்ச முகமாக இருக்கிறீர்கள், ஸார்?'' என்று கேட்டாள் மங்களா.

''அழறதுன்னு ஆரம்பிச்சா, அதுக்கு ஆரம்பம் இருக்கும். ஆனால் முடிவே இருக்காது. பகவான், மனுஷனுக்கு அவன் கேட்காமலேயே கொடுத்திருக்கிற வரம் சிரிப்பு ஒன்றுதான். சூரியன் உதிக்கிறப்போ தாமரை சிரிக்கிறது. நந்தவனத்தில் கிளி சிரிக்கிறது..... ஜலக்கிரீடையில் யானை சிரிக்கிறது.... ஆனால் மனுஷன்? எங்கே வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் சிரிக்கலாம்.... புண்ணுக்கு மருந்து சிரிப்புதான் மங்களா. எத்தனையோ கோயிலுக்குப் போயிருப்பியே. எந்தக் கோயிலிலாவது விக்கிரகம் கோபமாகவோ, விசனமாகவோ இருந்து பார்த்திருக்கிறாயா ? புன்முறுவலும் சிரிப்பும்தான் தெய்வத்திடம் காண முடியும்......''

''உங்கள் சிரிப்பு போலி. பொய்.... துக்கத்தை மறைக்க நீங்கள் போர்த்திக் கொள்கிற போர்வை.''

''இருக்கலாம். ஆரம்பத்தில் அப்படி இருக்கலாம். ஆனால் நினைவுகள் மறைய மறைய, போலியே உண்மையாகி விடுகிறது! எதுவும் நம் கையில் இல்லை. எதையும் நாம் செய்யவில்லை என்று நினைக்க ஆரம்பி.... எல்லாப் பாரத்தையும் அவன் பேரில் போடு... அவனே உன் உதட்டில் சிரிப்பை வரவழைப்பான்.... அது சரி, இந்தச் சிரிப்பு வேதாந்தத்தை இன்னொரு நாள் வைத்துக் கொள்ளுவோம்..உன் மனசு ஏன் சரியில்லை ?''

மங்களா எழுந்தாள்.

சிரித்தாள்.

''அப்புறமா சொல்றேன் சார்..... என் மனசு இப்போ சரியாயில்லே.''

அடுத்த கணம், அவள் அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

கடிகாரத்தைப் பார்த்தான். ஒன்று ஐம்பது.

ஆறாவது பிளாட்பாரத்திலிருந்து, பம்பாய் ஜனதா பெருமூச்சுடன் நகர்ந்து கொண்டிருந்தது. (தொடரும்)

அங்கம்மாவுக்கு உடம்பெல்லாம் நடுங்கிற்று. நேற்று வரையில் நேர்மையுடன் வாழ்ந்து நல்ல பெயரெடுத்த தான் இப்படி ஒரு வெட்கக்கேடான செயல் புரிய நேர்ந்ததே என்று நினைத்தபோது துக்கம் பொத்துக் கொண்டு வந்தது. ஆத்திரம் காரணமாக எழுந்த அசட்டுத் துணிச்சலில் அவள் அப்படிச் செய்யத் தீர்மானித்து விட்டாள். ஏன், செய்தே விட்டாள். நைலக்ஸ் புடவை




அவள் தயாராகக் கொண்டு வந்திருந்த பைக்குள் மறைந்து விட்டதே! இனிமேல் யார் கண்ணிலும் படாமல் வெளியேற வேண்டும்.

தீபாவளிக்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. கடைகளிலெல்லாம் ஒரே நெரிசல். துணிக் கடைகளைப் பற்றிக் கேட்க வேண்டுமா? ஒவ்வொன்றிலும் கூட்டம் மென்னியைப் பிடித்தது. கடைச் சிப்பந்திகளின் கழுத்திலெல்லாம் வியர்வை ஆறாக ஓடியது. அங்கம்மாள் நுழைந்திருந்த கடை அந்த வட்டாரத்திலேயே பெரிய கடை. உள்ளே நுழைகையில் புடவை வாங்க வந்திருந்த பெண்டிர் அவளை நெருக்கித் தள்ளி விட்டார்கள். எப்படியோ முண்டியடித்துக் கொண்டு முன்னேறி விட்டாள். முப்பது முப்பத்தைந்து புதுப் புடவைகளின் மணத்தை நுகர்ந்தவள் எப்படித்தான் ஒரு 'நைலக்ஸ்' புடவையை 'அபேஸ்' செய்து விட்டாளோ! கண் மூடித் திறப்பதற்குள் பைக்குள் மறைந்து விட்டது அது! உடனே இடத்தை விட்டுக் கிளம்பிவிடவில்லை அவள். குழம்பிக் கிடந்த மனம் கேட்ட பயங்கரமான கேள்விகளுக்கெல்லாம் பதில் தேடிக் கொண்டிருந்தாள். ஒரு கணம் அந்தப் புடவையைத் திருப்பித் தந்து வெளியேறி விட்டால் என்ன என்று கூட எண்ணினாள். ஆனால் அது எங்கே ஆபத்தில் வந்து முடியுமோ என்று அச்சம் அவளை ஆட்கொள்ளவும் சிலையாக நின்றாள்.

எதிரே சாலையில் வாகனங்கள் ஓடிக் கொண்டிருந்தன. கடைக்கெதிரில் காட்சி தந்த சினிமாப் 'போஸ்ட'ரில் இரண்டு போலீஸ்காரர்களுக்கு மத்தியில் ஒரு கைதி காட்சி தந்தான். பிரபல நடிகர் ஒருவர்தான் அந்தக் கைதி வேஷம் போட்டிருந்தார். அவர் நடிப்பென்றால் அங்கம்மாவுக்கு உயிர். ஆனால் இப்பொழுது அந்தப் படத்தைப் பார்க்கவே அவள் அஞ்சினாள். எங்கே தானும் இரண்டு போலீஸ்காரர்களுடன் போக நேருமோ என்ற எண்ணம் அவளை நிலைகுலையச் செய்தது. அதை மறைப்பதற்காகக் கடை முதலாளி உட்கார்ந்திருந்த பக்கம் தன் பார்வையைத் திருப்பினாள். அங்கே ஒரு பெரிய நிலைக் கண்ணாடி இருந்தது. கடையில் இருந்தவர்களையெல்லாம் சாய்வான கோணத்தில் காட்டியது அது. முகத்தைக் கொஞ்சம் விகாரப்படுத்திக் காட்டினதாகத் தோன்றியது அங்கம்மாவுக்கு. பிரமையோ?

கடை முதலாளிக்குப் பக்கத்தில் இருந்த எவர்சில்வர் பில்டரிலிருந்து ஒரு டம்ளர் தண்ணீர் பருகினாள் அங்கம்மா. பிறகு சாலையில் காலெடுத்து வைத்தாள். குளிர்ந்த காற்று இதமாக வீசவும், அங்கம்மா ஓர் ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள். எங்கே யாராவது தன்னைத் தொடர்ந்து வந்து, துணிப் பையைக் கைப்பற்றி, 'திருடி' என்று அழைப்பார்களோ என்ற அச்சம் இன்னும் விட்டபாடில்லை. எப்படியோ மேலே சென்றாள்.

எல்லாம் குழாயடியில் மற்றப் பெண்களுடன் பேசப் போனதினால் வந்த வினை! அங்கம்மா தன்னையே நொந்து கொண்டாள்.

''ஏண்டி அங்கு, தீவளிச் சேலை எடுத்துவிட்டாயாடி?'' என்று நீட்டி முழக்கினாள் ஷோக்கு சுந்தரி. அவள் எடுத்துவிட்டாள் என்பதைப் பறைசாற்றுவதற்காகத்தான் இந்தக் கேள்வி.




''அவள் புருஷன் வீட்டுப் பக்கம் தலை காட்டினால்தானே புடவை இடவை எடுப்பதற்கு?''

''நானும்தான் கேக்கணும்னு நெனைச்சேன். உன் புருஷன் எந்த ஊரில் இருக்கிறார்?''

''பட்டணத்திலே இருக்கிறதாச் சொல்லிக்கிறாரு; கல்லூரியிலே வேலையாம்.''

''என்ன வேலை?''

''அவர் ஹாஸ்டலில் பியூனாக இருக்கிறார்'' என்று ஒரே வார்த்தையில் பதிலளித்தாள் அங்கம்மா.

''பியூன்னா நூறு ரூபாயாச்சும் இருக்குமே? புருஷன் கூடவே இருக்கலாமே? இள வயசிலே நீ ஒரு ஊரிலே, அவரு ஒரு ஊரிலே இருக்கிறதுக்குக் கல்யாணமே கட்டிக்காமல் இருக்கலாமே!''

''ஆமாம், நீயும் இந்தத் தெருவிலே குடி வந்து ஒரு வருஷமாகப் போவுது. உன் புருஷன் ஒருவாட்டிகூட இந்தப் பக்கம் வரவில்லையே. தீவளிக்காவது வருவாரா?''

''அவருக்கு லீவு கிடைக்கிறது கஷ்டம். தீவளிக்கு எனக்குச் சேலை அனுப்பிச்சிருக்காரு. நாளைக்குத் தபாலில் வரும்'' என்று கூறிவிட்டு அவ்விடம் விட்டு அகன்றாள் அங்கம்மா. குழாயடியிலிருந்து எழுந்த சிரிப்பொலி காற்றில் மிதந்து வந்து அவள் செவிகளைத் தாக்கியது. அவள் சொன்னதை அவர்கள் நம்பவில்லையா?

அங்கம்மாவின் எண்ணங்கள் எங்கெங்கோ ஓடின. துக்கம் நெஞ்சை அடைத்தது. மற்றவர்களைப் போல் கணவனுடன் வாழ முடியவில்லையே என்று நினைத்தபொழுது அவள் கசப்பு வளர்ந்தது. கௌரவத்தை நிலை நாட்டுவதற்காக அவள் தன் கணவன் புடவை அனுப்பி விருக்கிறான் என்று சொன்னாளே தவிர, சத்தியம் எங்கிருக்கிறான் என்று அவளுக்குத் தெரியாது. அவனை அதட்டி வீட்டை விட்டு வெளியேற்றின காட்சி ஏனோ அடிக்கடி மனத்திரையில் தோன்றி மறைந்தது.

"புருஷனானால் என்ன, யாரானால் என்ன? திருட்டுப் புத்தி எனக்குப் பிடிக்காது. நீ வீட்டை விட்டு வெளியே போய்விடு...போ!"

"நான் திருடினதை நீ கண்ணால் பார்த்தாயா அங்கு?"

"எந்தத் திருடன்தான் தன் திருட்டை ஒப்புக் கொள்வான்? நீ போய்விடு. எங்காவது போய்விடு. திருடனின் மனைவி என்ற பழி எனக்கு வேண்டாம்."

அன்று வெளியேறினவன்தான்! பிறகு அவனை அங்கம்மா காணவேயில்லை. உள்ளூரிலேயே இருக்கிறானா, இல்லை, வேறு எங்காவது சென்றுவிட்டானா என்றுகூடத் தெரியாது.

சின்னப் பிள்ளையிலிருந்தே சத்தியத்தை அவளுக்குத் தெரியும். எப்படியோ கைநிறையச் சம்பாதித்துக் கொண்டு வந்து, அவளை வாரம் ஒரு சினிமாவுக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தானே!

அந்தக் கல்லூரி ஹாஸ்டலில் மட்டும்தான் அவன் தொடர்ந்து ஒரு வருடம் வேலை பார்த்தான். சாப்பாட்டைத் தவிர, நூற்றிருபது ரூபாய் 'கூலி'யாக வந்துகொண்டிருந்தது. மாணவர்கள் வேறு அவ்வப்போது ஒன்றோ இரண்டோ தருவார்கள். மொத்தத்தில் வரும்படிக்குக் குறைச்சல் இல்லை.

அப்பொழுதுதான் மாணவர் ஹாஸ்டலில் சாமான்கள் திருட்டுப் போகத் தொடங்கின. முதலில் சில்லறைத் திருட்டுக்களில் தொடங்கினது, நாளடைவில் விசுவரூபமெடுத்துப் பெரிய திருட்டுக்களாக மாறியது. ஹாஸ்டலில் வேலை பார்த்து வந்த யார் யாரையோ 'வார்டன்' சந்தேகித்தார். சத்தியத்தை யாரும் சந்தேகிக்கவில்லை. மாணவர்களுக்கு அவனிடத்தில் நல்ல அபிப்பிராயம் இருந்தது. ஆனால் கழற்றித் தொங்க விட்டிருந்த அவன் சட்டைப் பையிலிருந்து காணாமற்போன ஒரு கைக் கடிகாரம் கிடைத்தவுடன், அவனைச் சந்தேகிக்காமல் இருக்க முடியவில்லை. தனக்கும் திருட்டுக்கும் சம்பந்தமே இல்லை என்று சாதித்தான் சத்தியம். ஆனால் அவன் வார்த்தைகளைச் செவிமடுப்பவர் யார்? உத்தியோகம் தொலைந்தது. அது மட்டுமா? வீட்டுக்கு வந்த சற்றைக்கெல்லாம் தாம்பத்யம் என்ற பிணைப்பும் அறுந்தது.

"நீயுமா என்னைச் சந்தேகிக்கிறாய் அங்கு?"

"பின்னே என்ன? சும்மா குற்றம் சாட்டுவாங்களா? வேலையை விட்டு நீக்குவாங்களா? போ... நீ போய்விடு.... என் முகத்தில் இனி விழிக்காதே. திருடனின் மனைவி என்ற அபவாதம் எனக்கு வேண்டாம்."

**பை**யிலிருந்த திருட்டுச் சேலையைத் தொட்டுப் பார்த்தாள் அங்கம்மா. இன்று அவள் ஒரு திருடி. சந்தேகமே இல்லை. புருஷன் தனக்குச் சேலை அனுப்பியிருக்கிறான், தனக்கும் பிறரைப் போல் வாழ்வுண்டு என்று குழாயடி வம்பிகளுக்கு நிரூபிப்பதற்காக அவள் ஒரு திருடியாக மாறியிருந்தாள். அன்று 'திருடன்' என்று பழி சுமத்திக் கணவனை வீட்டை விட்டு வெளியேற்றினவள், இன்று கடைப்பொருளைக் களவாடியிருந்தாள்!

நள்ளிரவு. மழை பிய்த்து வாங்கிக்கொண்டிருந்தது. அங்கம்மா இன்னும் தூங்கவில்லை. அவள் வீட்டுக் கதவை யாரோ மெதுவாகத் தட்டினார்கள். போலீசாக இருக்குமோ? அவளுக்குச் சப்தநாடியும் ஒடுங்கியது. நடுங்கும் கரங்களுடன் கதவைத் திறந்தவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆஜானுபாகுவாக நின்று கொண்டிருந்தான் சத்தியம்!

"மச்சான், நீயா? நிஜமாக நீதானா? வா..."

"உட்கார நேரமில்லை. நான் உடனே போக வேண்டும். கடையில் வேலை இருக்கிறது. தீபாவளி சேலில் விடிய விடியக் கடையை மூட மாட்டோம்."

"கடையிலா வேலை செய்யறே மச்சான்?"

"நீ புடவை திருடின கடையில்தான்!"

அங்கம்மாளுக்கு உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது.

"ஆமாம், எங்கே அந்தத் திருட்டுப் புடவை? உன் புத்தி ஏன் இப்படிப் போச்சு?"

"மச்சான்...!" என்று ஏதோ சொல்ல வாயெடுத்த அங்கம்மாள் அழுதே விட்டாள்.

"என்னைப் போலீஸில் எழுதி வச்சுடு மச்சான்... எழுதி வச்சுடு. உன் மீது பழி சுமத்தினதுக்கு அதுதான் தண்டனை."

"நீ போலீஸில் மாட்டிக் கொள்ளக் கூடாது என்று எண்ணித்தானே நான் வலிய வந்து பணம் தந்தேன்? இந்தா, பிடி, அந்தப் புடவைக்கான 'பில்'லை!"

"நீயா பணம் தந்தே மச்சான்?"

"பின்னே என்ன செய்வது? ஒரு திருடியின் கணவன் நான் என்று எண்ணிப் பார்க்க எனக்கு வெட்கமாக இருந்தது. உன்னைப் போல் கும்பலில் புகுந்து துணி திருடுகிறவர்களைக் கண்காணிப்பதற்காகத்தானே எனக்கு முதலாளி பணம் தருகிறார்? அவருக்குத் துரோகம் செய்யலாமா? முதலில் உன்னைக் கையும் களவுமாகப் பிடித்துத் தருவது என்றுதான் தீர்மானித்தேன்."

"அப்படிச் செய்திருக்கலாமே?"

"செய்திருக்கலாம்... ஆனால் முடியவில்லை. ஏதோ ஒன்று என்னைத் தடுத்து நிறுத்தியது. அடுத்த கணம் நான் முதலாளி முன் போய் நின்றேன். உனக்கு நான் ஒரு தீபாவளிச் சேலை எடுத்திருப்பதாகக் கூறி அதற்கான விலையைத் தந்தேன். 'மனைவிக்கா? பலே பேஷ்' என்றார் அவர். நீ திருடிச் சென்ற விவரம் அவருக்கு எங்கே தெரியும்?"

"மச்சான், உன்னிடமிருந்து தீவளிச் சேலை வர வழியில்லையே என்று ஏங்கியல்லவோ திருடினேன்?...நீயோ இதோ எனக்குத் தீபாவளிச் சேலை அளித்து விட்டாயே!" என்று கூறிச் சத்தியத்தின் மார்பில் சாய்ந்தாள் அங்கம்மா.

குடிசையை வெட்டிவிட்டுச் சென்ற மின்னலின் வெள்ளிக் கீற்று சத்தியத்தின் ஒளியாகத் தோன்றியது அங்கம்மாவுக்கு!

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது

# ஒகாஸா




வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**
**P. O. BOX 396, BOMBAY-1.**

---

இன்றைய முன்னணி பிரபல

## பழனி டாக்டர் எஸ், காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

அவர்களின் விஜயம்



சந்திக்கும் விலாசங்கள் :

1-தேதி திருநெல்வேலி : நெல்லை வாட்டு. காலை 8 மணி முதல் பகல் 2 மணி வரை.

1-ந் தேதி நாகர்கோவில் : உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், மாலை 4 மணி முதல் 6 மணி வரை.

2-ந் தேதி மதுரை : மணீஸ் கபே, காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

2-ந் தேதி புதுக்கோட்டை : வஸந்தா வாட்டு மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை.

3-ந் தேதி காரைக்குடி : AVM. PL. ரெஸ்ட் ஹவுஸ், காலை 8 மணி முதல் 11 மணி வரை.

3-ந் தேதி அறந்தாங்கி : கோகுலம் வாட்டு பகல் 12 மணி முதல் 1 மணி வரை.

3-ந் தேதி பட்டுக்கோட்டை : அசோகா வாட்டு பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை.

3-ந் தேதி மன்னார்குடி : மன்னை வாட்டு மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை.

4-ந் தேதி திருச்சி : ஹோட்டல் அஜந்தா காலை 8 மணி முதல் 2 மணி வரை.

4-ந் தேதி கரூர் : பெரியார் உணவு விடுதி மாலை 3-30 முதல் மாலை 5 மணி வரை.

5-ந் தேதி தஞ்சை : ராஜா ரெஸ்ட் ஹவுஸ் காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

6-ந் தேதி திருவாரூர் : அபூபக்கர் பில்டிங் மாலை 2 மணி முதல் மாலை 4 மணி வரை.

6-ந் தேதி நாகை : தினகரி விலாஸ், பகல் 5 மணி முதல் 7 மணி வரை.

6-ந் தேதி காரைக்கால் : அசோக் வாட்டு காலை 8 மணி முதல் 10 மணி வரை.

6-ந் தேதி கும்பகோணம் : தாத்மஹால் வாட்டு, காலை 11 முதல் 2 மணி வரை.

6-ந் தேதி மாயவரம் : காளியாகுடி வாட்டு பகல் 3 மணி முதல் 4-30 மணி வரை.

7-ந் தேதி கடலூர் N. T.: ஹோட்டல் பிருந்தாவனம், இரவு 7 மணி முதல் 8-30 மணி வரை.

7-ந் தேதி பாண்டிச்சேரி : அருணா வாட்டு காலை 8 மணி முதல் 10 மணி வரை.

7-ந் தேதி சிதம்பரம் : ஹோட்டல் பாலேஸ் பகல் 12 மணி முதல் 1 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன் : 316] பழனி [தந்தி : சித்தர்

# ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம்

## பழனி

(மதுரை மாவட்டம்)

பழனிக்கு வருகின்ற யாத்ரிகர்களுக்கென இந்த தேவஸ்தானத்திலிருந்து இரண்டு யாத்ரிகர் விடுதிகள் பழனி ரயில்வே பீடர் ரோடில் (பஸ் ஸ்டாண்டு அருகில்) "தேவஸ்தான சத்திரம்" என்ற பெயரிலும், ஆண்டவர் பூங்கா ரோடில் மலை அடிவாரத்தில் "தண்டபாணி நிலையம்" என்ற பெயரிலும் நிர்வகித்து வரப்படுகின்றன.

**கட்டண விபரம்** *(24 மணி நேரத்திற்கு)*

**1. தேவஸ்தான சத்திரம் :**

| | மொத்தம் உள்ள அறைகள் | அறை ஒன்றுக்கு கட்டணம் | அனுமதிக்கப் படும் மொத்த நபர் | கூடுதல் கட்டணம் உபரி நபர் ஒன்றுக்கு |
|---|---|---|---|---|
| | | ரூ.பை. | | ரூ.பை. |
| அ. முதல் வகுப்பு | 4 | 8-00 | 4 | 1-50 |
| ஆ. இரண்டாம் வகுப்பு | 24 | 3-00 | 4 | 0-75 |
| இ. மூன்றும் வகுப்பு | 22 | 1-50 | 1 | 0-50 |

**2. தண்டபாணி நிலையம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| அ. முதல் வகுப்பு | 10 | 10-00 | 4 | 1-00 |
| ஆ. இரண்டாம் வகுப்பு | 34 | 5-00 | 4 | 1-00 |
| இ. மூன்றும் வகுப்பு | 40 | 2-50 | 2 | 1-00 |
| ஈ. சிறு குடில்கள் (காட்டேஜ்) | 20 | 10-00 | 4 | 1-00 |
| உ. டீலக்ஸ் சிறுகுடில் | 2 | 15-00 | 4 | 1-00 |

இரண்டு யாத்ரிகர் விடுதியிலும் மூன்றும் வகுப்பு அறைகளைத் தவிர மீதமுள்ள அறைகள் யாவும் குளிக்கும் அறை, மற்றும் கழிவறைகள் இணைக்கப்பட்டவையாகும். இரண்டு யாத்ரிகர் விடுதிகளிலும் சிற்றுண்டிச் சாலைகளும் இணைக்கப்பட்டுள்ளன.

அறைகள் முன்னதாகவே பதிவு செய்து கொள்ள விரும்புவோர் ஒரு நாள் கட்டணத்துடன் பதிவுக் கட்டணத் தொகை ரூ. 0-50ம் சேர்த்து அந்தந்த யாத்ரிகர் விடுதிகளில் கண்காணிப்பாளருக்கு பண அஞ்சல் மூலம் அனுப்பி பதிவு செய்து கொள்ளலாம். யாத்ரிகர்கள் தங்களது பண அஞ்சலில் தாங்கள் வருகின்ற நேரத்தையும் குறித்து அனுப்பக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

தேதி: 11-11-71 **துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி**

வங்காள மூலம்: மனோஜ் வசு

# எல்லை

தமிழாக்கம்: சு. கிருஷ்ண மூர்த்தி

கேட்ட கதைமாதிரி இருக்கும்; ஆனால் முற்றிலும் உண்மை. இஸ்மாயிலின் வீட்டின்முன் பக்கம் பாகிஸ்தானிலும், பின்புறத் தாழ்வாரம் இந்தியாவிலும் விழுந்தது. அவர்கள் இரண்டு பேர்கள்தான். புருஷனும் மனைவியும்.

இப்போது இஸ்மாயில் முழுக்க முழுக்கப் பாகிஸ்தானி. அவனை இனி யாரும் ஒன்றும் சொல்ல முடியாது.

அவன் இன்னும் ஒரு காரியத்தை ரகசியமாகச் செய்து முடித்தான். பழைய தாழ்வாரத்தில் பூமிக்கடியில் புதைத்து வைத்திருந்த சட்டியை இரவோடிரவாகத் தோண்டி எடுத்துப் புதிய தாழ்வாரத்தில் புதைத்து வைத்தான்.

இஸ்மாயிலுக்கு ஏற்பட்ட நிலை இன்னும் பலருக்கு ஏற்பட்டது. அவரவர் அவரவருக்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்து கொண்டார்கள். அவர்கள் தலைமுறை தலைமுறையாக அக்கம் பக்கத்துக்காரர்களாக வாழ்ந்தவர்கள். அவர்களிடையே எவ்வளவு நெருக்கம் இருந்து வந்தது! ஆனால் திடீரென்று ஏதோ ஒரு மாயம் நிகழ்ந்து விட்டது. இப்போதும் அவர்களிடையே சந்திப்பும் பேச்சு வார்த்தையும் உண்டுதான்; ஆனால் முன்பிருந்த நெருக்கமும் பரஸ்பரம் அன்பும் அடியோடு மறைந்து விட்டன. கண்ணுக்குத் தெரியாத வேலி ஒன்று அவர்களிடையே விழுந்து விட்டது.

ஒரே ஊர் இரண்டாகப் பிரிந்துவிட்டதே. இதென்ன மாயம்! ஊரில் உள்ள கிழவர்களால் இந்த மாறுதலை நம்ப முடியவில்லை. "ஆனால் ஒரு பக்கத்திலிருந்து வரும் காற்று இன்னொரு பக்கம் வீசாமல் தடை செய்ய முடியவில்லையே; அதைத் தடுக்க ஒரு சுவர் கட்டட்டுமே, பார்க்கலாம்!" என்றார்கள் அவர்கள்.

சுவர் கட்டப்படவில்லைதான். ஆனால் இரு புறமும் மரங்கள் அடர்ந்த சாலையில் ஒரு புளிய மரத்தில் 'பி' என்ற எழுத்தைச் செதுக்கி வைத்தார்கள். அந்த இடத்திலிருந்து பாகிஸ்தான் ஆரம்பமாவதைக் குறிக்க இந்த அடையாளம். அதற்குச் சற்றுத் தூரத்தில் இரு புறமும் போலீஸ்காரர்களும், சுங்க அதிகாரிகளும் கூடாரம் அடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். ரஸ்தாவில் செல்லும் மனிதர்களும் வண்டிகளும் கூடாரங்களுக்கெதிரே நிறுத்தப்பட்டுச் சோதிக்கப்பட்ட பிறகே மேலே செல்ல அனுமதிக்கப்பட்டன.

பாகிஸ்தானில் விழுந்த பகுதியின் பெயர் கேஷ்டோபூர்; இந்தியப் பகுதியின் பெயர் ராதா நகர். ஒன்றாக இணைந்திருந்த கிருஷ்ணனையும் ராதையையும் இப்போது அரசியல் பிரித்து விட்டது. அந்தக் கிராமங்களின் மக்கள் கூடார அதிகாரிகளின் ஆர்ப்பாட்டங்களைக் கண்டு திகைத்துப் போனார்கள். கிராமப் பெரிய மனிதர்களுக்கு முன்பெல்லாம் இருந்த செல்வாக்கு இப்போது இல்லை. அவர்களை யாரும் சட்டை செய்வதில்லை. ஊரில் பலவித வதந்திகள் பரவிக் கொண்டிருந்தன.

மஞ்சு ஒரு நாள் அதிகாலையில் வந்து இஸ்மாயிலின் வீட்டுக் கதவைத் தட்டினாள்.



''விடிஞ்சு எவ்வளவு நேரம் ஆச்சு? இன்னுமா தூக்கம்? இஸ்மாயில் அண்ணு! எழுந்திரு, எழுந்திரு! நான்தான் மஞ்சு!''

''விடிவெள்ளி இன்னும் வானத்துலே இருக்கு. அதுக்குள்ளே ரொம்ப நேரமா யிடிச்சாமே! உளர்ரு....'' என்று முணுமுணுத்துக் கொண்டே இஸ்மாயில் வெளியே வந்தான்.

''என்ன இப்படி மொறச்சுப் பாக்கறே, அண்ணு? மச்சினனும் அவன் பொண்டாட்டியும் என்னை வெரட்டிட்டாங்க. எனக்கு இந்த ஊரை விட்டா வேறே கதியில்லே.''

''வந்தது எப்போ?''

மஞ்சுவுக்குக் கோபம் வந்து விட்டது. ''உனக்கு என்ன வந்திடுச்சு அண்ணு? கிறுக்குப் பிடிச்சிடுச்சா? எங்கிட்டே இவ்வளவு மரியாதை எதுக்கு? 'வந்தது எப்போ'வாம்! கேள்வியைப் பார் கேள்வியை!''

இஸ்மாயில் பதில் சொல்லாமல் அவனைத் தாண்டிப் போய் விட்டான். ஆனால் மஞ்சு அவனை விடவில்லை.

''நீ என்னை 'வா'ன்னு அழைக்கல்லே! வழக்கம் போல் செல்லமா திட்டல்லே! 'இந்த ஸ்மசானத்துக்கு ஏன் வந்தே'ன்னு கூடக் கேக்கல்லியே அண்ணு?''

இஸ்மாயில் முகத்தைத் திருப்பிக்கொண்டு உயர்ந்த குரலில் பதில் சொன்னான்: ''இந்த ஊரை ஏன் ஸ்மசானங்கிறே? இங்கே யாரும் யாரையும் பட்டணத்திலே செய்யற மாதிரி மண்டையை உடைச்சுக் கொல்லலியே!''

''காயஸ்தத் தெரு முழுதும் பார்த்திட்டு வந்துதான் ஸ்மசானம்னு சொல்றேனுக்கும்! ஒருத்தரும் ஒருத்தரையும் அடிச்சுக் கொல்லலேன்னு அவங்க எல்லாரும் எங்கே போயிட்டாங்க? வீடுங்களெல்லாம் பேய் வாழுற பாழ் மண்டபம் மாதிரின்னு இருக்குது!''

மஞ்சுவின் உதடுகள் உணர்ச்சி மிகுதியால் துடித்தன. அவன் யாரும் கவனியாத வண்ணம் தன் கண்களில் துளிர்த்த நீரை இடது கையால் துடைத்து விட்டுக் கொண்டு கெஞ்சும் குரலில் சொன்னான்: ''நான் இப்படியே நின்னுக்கிட்டுத்தான் இருக்கணுமா அண்ணு? என்னை உட்காரக்கூடச் சொல்ல மாட்டியா?''

அவனுடைய குரலைக் கேட்டு இஸ்மாயிலின் மனைவி காமரன் வெளியே வந்தாள். அவள் சொன்னாள்: ''ஏன் இப்படிப் பேசறே மஞ்சு? இந்த வீட்டிலே உன்னை வரவேத்து ஆசனம் கொடுத்து உட்காரச் சொல்லணுமா?''

மஞ்சு புகார் செய்தான். ''பின்னே பாரேன், அண்ணி! அண்ணன் எப்படி மாறிட்டான்! நான் ஏதோ வேத்து மனுஷி மாதிரி எங்கிட்டே பேசுறானே!''

''அவர் கிடக்கிறார் போ. நீ செருப்பைக் கழட்டிட்டு உள்ளே வா!'' காமரன் மஞ்சுவைத் தேற்றி உள்ளே அழைத்துச் சென்றாள்.

மஞ்சுவுக்கு மிக்க மகிழ்ச்சி. ''இந்தக் கடு காட்டிலே நீ ஒருத்திதான் உயிரோடே இருக்கே, அண்ணி! நல்ல வேளை, நான் பிழைச்சேன்! அண்ணன் இருக்கிற இருப்பைப் பார்த்து, இது அவன்தானு அவனுடைய ஆவியான்னு பயந்து போயிட்டேன் நான்!''

பல் துலக்க வேப்ப மரத்திலிருந்து குச்சி ஒடித்துக் கொண்டிருந்த இஸ்மாயிலை ஒரு தடவை திரும்பிப் பார்த்துவிட்டு மஞ்சு தொடர்ந்து பேசினான். ''அண்ணனுக்கு என்ன வந்திடுச்சு அண்ணி? அவன் முகம் போற போக்கைப் பார்த்தா என்னைக் கன்னத்துலே அறைஞ்சுடுவான் போலே இருக்கே!''

அங்கு நிலவிய இறுக்கமான சூழ்நிலையைத் தன் பேச்சால் மாற்றிவிடுவதுதான் அவனுடைய நோக்கம். ஆனால் ஏற்பட்ட விளைவோ அதற்கு நேர்மாறானதுதான்.

இஸ்மாயில் கைமுஷ்டியை மூடிக்கொண்டு சீறினான்: ''ஆமாம், உன்னை அறையணும் போலேதான் இருக்கு எனக்கு! ஒரு அடியிலே உன் மண்டையைச் சிதற அடிக்கணும் போலே இருக்கு!''

காமரனுக்கு எரிச்சல் வந்தது. ''சீ, என்ன பேச்சு இது? கலகம் செய்தவங்களெல்லாம் நழுவி விட்டாங்க. அவங்களை ஒன்னுலே ஒன்னும் செய்ய முடியல்லே! நம்மைச் சேர்ந்த மனுஷி நம்ம வீட்டுக்கு வந்திருக்கா! அவகிட்டே ஒன் சூரத்தனத்தைக் காட்டுறியே, என்ன ஆம்பிளே நீ!''

இஸ்மாயில் சொன்னான்: ''இதுதான் இப்போ சட்டம், தெரியுமா? இப்போ எல்லாம் வித்தியாசம் மனுஷனைப் பொறுத்த இல்லே, மதத்தைப் பொறுத்தது — இந்து, முஸ்லிம். ஒரு மதத்துக்காரன் வேறு மதத்துக்காரனை அடிக்கணும், கொல்லணும், பழி தீர்க்கணும்!''

மஞ்சு சொன்னான்: ''ரொம்ப சரி அண்ணு! என் மண்டையை ஒடைச்சிடு! ஒன்மேலே ஆணை! என் மண்டையை ஒடைச்சிடு! இவ்வளவு நம்பிக்கையோடே நான் ஒன் வீட்டுக்கு வந்தேனே, எனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்!''

உடல் துடிக்கத் துடிக்க அவன் இஸ்மாயிலிடம் ஓடி வந்தான். காமரன் அவனைத் தடுத்து நிறுத்தினாள். அப்படியும் மஞ்சுவின் ஆவேசம் அடங்கவில்லை. அவன் தூணில் தலையை முட்டிக்கொள்ள ஆரம்பித்தான்.

சிறு வயதிலிருந்தே அவன் குணம் அப்படி. அவனுக்குக் கோபம் வந்து விட்டால் தலை கால் தெரியாது. இதனால்தான் அவனால் புக்ககத்தில் காலம் தள்ள முடியவில்லையோ, என்னவோ!

காமரன் அவனைத் தேற்றினாள். ''இதுக்காக வருத்தப்படாதே, மஞ்சு! ரம்ஜான் செத்துப் போனப்புறம் இப்படித்தானிருக்கார் உங்கண்ணன். சில சமயம் என் மேலே எரிஞ்சு விழுகிறார்: நான்தான் போக்கிடம் இல்லாமே தவிச்சுக்கிட்டு இருக்கேன்.''

இஸ்மாயிலின் குடும்பம் வசதியோடு வாழ்ந்தது. கொல்லையில் மாடுகள், குதிர் நிறைய நெல். இஸ்மாயில் தன் வருமானத்தில் வீட்டைப் பழுது பார்த்தான். ரம்ஜான் அவனுக்கு ஒரே பிள்ளை. ரம்ஜானை நன்றாகப் படிக்க வைத்து அவனை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்று இஸ்மாயிலுக்குக் கொள்ளை ஆசை. காமரனின் அப்பா பட்டணத்தில் வக்கீல். ரம்ஜான் அவரிடம் தங்கியிருந்து கொண்டு பள்ளியில் படித்து வந்தான்.

திடீரென்று ஒரு நாள் அந்தச் செய்தி வந்தது: மத வெறியர்கள் ரம்ஜானைத் தடியால் அடித்து அவன் மண்டையைப் பிளந்துவிட்டார்களென்று. இரண்டு மாதங்கள் பட்ட

# ஏஸிஸியின் ஃபயர்க்ரீட் மற்றும்

# ஃபயர்க்ரீட் ஸூபர் கேஸ்டபிள் ரிஃப்ராக்டரீஸ்

## உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானது



உறுதியுடன் நீடித்து நிலைக்கும் ஃபயர்க்ரீட் கேஸ்டபிள்ஸ் விரைவிலே படிந்து உறுதியாகிறது. அவை வெப்ப அதிர்ச்சிகளை எதிர்த்து, அதிகமான பளுவையும் தாங்குகின்றன. உலைகள், கார் கூரைகள், நிலவிட்டங்கள், கனிடிங் வேலைகள், வார்ப்பு வடிவங்கள், கொட்டு வாளியின் லைனிங்குகள், சாம்பல் குழிகள், மாநோலிதிக் ரிப்ராக்டரி ஆகிய நிர்மாண வேலைகளுக்கு உபயோகமாகும் ஃபயர்க்ரீட் கேஸ்டபிளை எந்த வடிவிலும் வார்க்கலாம்.

1350°ஸி வரையிலான வெப்ப நிலைகளுக்கு ஃபயர்க்ரீட்;
1550°ஸி வரையிலான வெப்ப நிலைகளுக்கு ஃபயர்க்ரீட் ஸூபர்—மேலும் அதிகமான வெப்ப நிலைகளுக்கு, இன்ஸுலேடிங் கேஸ்டபிள்ஸ் உள்பட உங்கள் தேவைக் கேற்றவாறு விசேஷமாகத் தயாரிக்கப்படும் கேஸ்டபிள்ஸ் கிடைக்கும்.

**ACC**

உயர் தர
தயாரிப்புக்களுக்கு
உங்கள் உத்தரவாதம்

*தி சிமெண்ட் மார்கெடிங் கோ. ஆப் இந்தியா லிட். மற்றும் அன்னாரது விநியோகஸ்தர்களிடம் தயாராகக் கிடைக்கிறது*

ms. ACC-365 TAM.

***தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட் • தி ஸிமெண்ட் மார்கெடிங் கோ. ஆப் இந்தியா லிட்.***

# கொஞ்சுமிளம் தென்றலோ, குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜேய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜேய்—ஜிகினாத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜேய் அழகு சோப் [illegible] மல்லிகை மணம் கமழ்வது.**

டாடா தயாரிப்பு.

ணந்து ஆஸ்பத்திரியில் அவனுக்குச் சிகிச்சை செய்துவிட்டு அவனை ஊருக்குக் கொண்டு வந்தான் இஸ்மாயில். படிப்பும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம், பையன் உயிரோடிருந்தால் போதுமென்றாகி விட்டது அவனுக்கு.

ரம்ஜான் சிறு வயதிலிருந்தே ரொம்பச் சூடிகை. அந்த ஊர்த் திண்ணைப் பள்ளிக்கூடத்து வாத்தியார் ஹரீஷ் பண்டிதர் வாய் ஓயாமல் ரம்ஜானின் புத்திசாலித்தனத்தைப் புகழ்வார். அப்படிப்பட்ட பையன் இந்த விபத்துக்குப் பிறகு அதிகம் பேசுவதேயில்லை. கண்களை உருட்டி, மலங்க மலங்க விழிப்பான். தனக்குப் புரியாத இந்தக் கொடுமை நிறைந்த உலகத்தைப் பார்த்துக் குழம்புவான்; திடீரென்று கத்துவான். "ஐயோ, அப்பா, அதோ வராங்களே! எனக்குப் பயமாயிருக்கே!" — கத்திக் கொண்டே எழுந்து ஓட முயற்சி செய்வான். ஒரு நாள் இப்படித்தான் ஓடிப்போய் மொட்டை மாடியிலிருந்து கீழே விழுந்து விட்டான். ஏற்கனவே உடைபட்டிருந்த மண்டையில் மறுபடியும் அடிபட்டு ரத்தம் ஆறாகப் பெருகிற்று. பையனுக்கு நினைவு தப்பிவிட்டது. சற்று நேரத்துக்கொரு முறை அவனுக்கு நினைவு திரும்பும்போதெல்லாம் அவன் "தண்ணீர்! தண்ணீர்!" என்று கத்துவான். மரண தாகம் ஏற்பட்டுவிட்டது அவனுக்கு. உலகத்தில் உள்ள கடல், ஆறு, குளம் எல்லாவற்றின் தண்ணீரையும் குடித்துத் தீர்த்தாலும் தணியாத மரண தாகம் அவனுக்கு. இரண்டு நாட்களில் அவனது உயிர் பிரிந்து போய்விட்டது....

ரம்ஜான் இறந்த நினைவு வரும்போதெல்லாம் இஸ்மாயிலுக்குத் தலை சுற்றும். மூளை குழம்பும்; அப்போது அவன் மிருகமாக ஆகிவிடுவான்....

மஞ்சு காமரனைக் கேட்டாள்: "என் அப்பாவைப் பற்றி ஏதாவது சேதி தெரியுமா?"

"தெரியாதம்மா!" சொல்லும்போது காமரனுக்குத் தொண்டையை அடைத்தது.

"அவரை அடிச்சுக் கொன்னுட்டாங்களா?"

"இல்லே, இல்லே! இந்தப் பக்கத்திலே கத்திக் குத்து, கொலை இதெல்லாம் ஒண்ணும் நடக்கல்லே; ஆனா இதெல்லாம் இல்லாமேயே அவங்க அணு அணுவாச் செத்துக்கிட்டு இருந்தாங்க. அப்புறம் திடீர்னு எங்கேயோ போயிட்டாங்க. எங்கே போனாங்களோ தெரியாது."

தலைமுறை தலைமுறையாக அந்தச் சுற்றுப்புறத்தில் வசித்து வந்த மஞ்சுவின் அப்பா, அவரைப் போன்ற இன்னும் பலர் இவர்களுடைய நினைவு காமரனின் மனத்தைக் கலக்கியது. மஞ்சுவின் அப்பாவாவது தனிக்கட்டை; அவர் எப்படியோ போகட்டும். ஆனால் பெண்டாட்டி பிள்ளை குட்டிகளுடன் ஓடினார்களே, மற்றவர்கள், அவர்கள் நிலை என்ன? பாவம், அவர்கள் எங்கே அகதிகளாய் அலைகிறார்களோ!

"சுத்தப் பயந்தாங்கொள்ளிகள்! சொந்த ஊரை விட்டு, சொந்த வீடுகளை விட்டு ஓடிட்டாங்களே! இங்கேயே தங்கியிருக்கத் திராணியில்லே!" மஞ்சு சொன்னாள்.

"அவங்களைக் குத்தஞ் சொல்லாதே, மஞ்சு! சொந்த மண்ணை விட்டுவிட்டுப் போக யாருக்கும் இலேசா மனசு வந்திருக்குமா? எவ்வளவு கஷ்டம் வந்திருந்தால் எல்லாத்தையும் துறந்திட்டு நாடோடியா ஓடியிருப்பாங்கன்னு யோசிச்சுப் பாரு! களவாணிப் பசங்க மாதிரி ராவோட ராவா ஓடினாங்களே, அதை நினைக்க நினைக்க என் வயிறு எரியுது, மஞ்சு!"

"ஆனால் நான் இங்கேதான் இருக்கப் போறேன், அண்ணி! நான் ஓடிப் போகமாட்டேன். எனக்குப் போக்கிடம் எங்கே, சொல்லு? அண்ணன்கிட்டே சொல்லி என் வீட்டிலே ஓர் அறையை ரிப்பேர் பண்ணிக்கிறேன். அதுக்குக்கூட என்ன அவசியம்? நான் ஒண்டிக்கட்டை; எனக்கு உன் வீட்டிலே இடமில்லையா? வேண்டப்பட்ட மனுஷங்களோடேயே இருந்துட்டு ஒரு நாள் சாகிறேனே! பிச்சைப் பாத்திரத்தை எடுத்துக்கிட்டு, ஊர் ஊரா அலைஞ்சுக்கிட்டு அவமானப்படுறதைவிடச் சொந்த ஊரிலே சாகிறது மேல் இல்லையா?"

"சரி, சரி, வம்பளந்தது போதும். குளிச்சிட்டுச் சமையலுக்கு ஆக வேண்டியதைப் பார்!" இஸ்மாயில் மஞ்சுவை அதட்டினான்.

மஞ்சு சோம்பல் முறித்துக் கொண்டு பதில் சொன்னாள்: "ஆமா, என் ஒருத்திக்காகச் சமையல் செஞ்சிக்கணுமாக்கும்! எனக்குஞ் சேர்த்து நீ சமையல் செய்யமாட்டியா, அண்ணி? என்னைப் பட்டினி போட்டுவிட்டு நீ மட்டும் சாப்பிடுவியா?"

காமரன் தயங்கினாள்: "முன்பெல்லாம் உனக்குச் சமைச்சுப் போட்டிருக்கேன். நீயுந் தான் சாப்பிட்டிருக்கே! ஆனால் இப்போ உன் புருசன் செத்துப் போயிட்டான், எங்க சமையலைச் சாப்பிடலாமா, நீ? ஊரிலே உள்ளவங்க என்ன சொல்லுவாங்க?"

மஞ்சு பதில் சொல்லுமுன் இஸ்மாயில் குறுக்கிட்டான். "மகாராணி சமையல் செஞ்சு சாப்பிடமாட்டாளோ? சரிதான்! சமையல் செஞ்சு சாப்பிட்டால் சாப்பிட்

டும், இல்லேன்னு பட்டினி கிடக்கட்டும், ஆமாம் !''

இஸ்மாயில் கோபமாகப் பேசினால் அவனுக்குத் தணிந்து போகும் வழக்கம் மஞ்சுவுக்குக் கிடையாது. ''சரி, அப்படியே பட்டினி கிடக்கிறேன்! ஒரு சொட்டுத் தண்ணிகூடக் குடிக்காமல் இருக்கிறேன், அவ்வளவுதானே !''

இஸ்மாயில் முணுமுணுத்தான். ''மகாராணி அம்மாவுக்குச் சமையல் பண்ணி வாயிலே ஊட்டணுமாம்! அப்பன்காரன் எங்க தலை மேலே ஏறி உட்கார்ந்துக்கிட்டு அதிகாரம் பண்ணினான்! பொண்ணுக்கும் அந்தக் குணம்தானே வரும்!.... ஆனால் இது பாகிஸ்தானுக்கும், ஞாபகம் இருக்கட்டும் ! இங்கே உங்க அதிகாரமெல்லாம் செல்லாது!''

''சீ, இதென்ன உளறல்!'' காமரன் தன் கணவனைக் கண்டித்தாள். ''சின்ன வயசிலேயிருந்து மஞ்சு நம்ம வீட்டிலே சாப்பிட்டு வந்திருக்கா ! நீயே எவ்வளவு தடவை அவனுக்குச் சோறு ஊட்டியிருக்கே! அதனால்தான் அவன் அப்படிச் சொன்னான்!''

''அதெல்லாம் இனிமேல் நடக்காது! நன்றி கெட்ட கும்பல் இது! கடைசியிலே நாம் இவனுக்கு விஷம் கொடுத்ததா புகார் பண்ணினாலும் பண்ணுவா! அப்புறம் என் கையிலே விலங்கு மாட்டுவாங்க !''

சில்லறைகள் இருந்த பகுதியை நோக்கி நடந்தான் இஸ்மாயில்.

நள்ளிரவு. எங்கும் அமைதி. இஸ்மாயிலுக்கு மட்டும் அமைதி இல்லை. இன்னும் ரம்ஜானின் குரல் அவனை அலைக்கழிக்கிறது. தாழ்வாரத்தில் படுத்திருந்த அவன் உறக்கம் வராமல் இங்குமங்கும் புரண்டான். மெல்ல எழுந்து உள் பக்கம் எட்டிப் பார்த்தான். காமரனும் மஞ்சுவும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார்கள்.

இப்போது இஸ்மாயில் மட்டும் தனியாகத்தான் இருக்கிறான். இல்லை, இல்லை, அவன் தனியாக இல்லை. அவனுக்குத் துணை மோகராக்கள்; அவன் கையைக் கட்டி, வாயைக் கட்டிச் சேமித்து வைத்துள்ள மோகராக்கள்.

அவன் என்றாவது ஒரு நாள் நள்ளிரவில் ஆருக்கும் தெரியாமல் இருட்டில் தாழ்வாரத்தில் குழியைத் தோண்டிப் பானையை வெளியில் எடுத்து மோகராக்களைக் கையால் தடவித் தடவிப் பார்த்துவிட்டு மறுபடியும் பானையைக் குழியில் வைத்துவிடுவான்: இந்த மோகராக்கள்தான் இப்போது அவனுடைய குழந்தைகள். இவற்றைச் சம்பாதிக்க அவன் கொஞ்சமாகவா கஷ்டப்பட்டிருக்கிறான் !

இஸ்மாயில் தான் படுத்திருந்த ஜமக்காளத்தை எடுத்துவிட்டு ஒரு சிறு கடப்பாரையால் தரையைத் தோண்டினான். பானை கைக்குத் தட்டுப்பட்டது. கையை அதற்குள் விட்டுப் பார்த்தான். ஊஹூம், இன்னும் பானை நிரம்பவில்லை. அது நிரம்ப இன்னும் எவ்வளவு மோகராக்கள் தேவைப்படுமோ ?

அவனுக்கு ஓர் அர்த்தமற்ற சந்தேகம் தோன்றியது. மோகராக்கள் முன்பு இருந்ததைவிடக் குறைவாகிவிட்டனவா ? மண் மோகராக்களைக் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சி விடுகிறதோ ? விளக்கேற்றிப் பார்க்க முடியாமல் தவித்தான் அவன். விளக்கேற்றினால் ஆபத்து. யாராவது வேலி இடுக்கு வழியாக அந்த மோகராக்களைப் பார்த்துவிட்டால்....! இஸ்மாயிலே அந்த மோகராக்கள் எல்லாவற்றையும் சேர்ந்தாற்போல் தன் கண்களால் பார்த்ததில்லை; கைகளால் அவற்றைத் தடவிப் பார்ப்பதோடு சரி....

ஒரு பெரிய குளம் வெட்டுவது அவன் திட்டம். ஊர்ப் பஞ்சாயத்து யூனியனின் தலைவனை ரஃபீயிடம் அவன் முன்னமே சொல்லி வைத்திருக்கிறான். ரஃபீ வாலிபன்தான்; இருந்தாலும் நாணயஸ்தன். அதனால்தான் அவனுக்கு அந்தப் பதவி கிடைத்தது. இஸ்மாயில் ஊர்ப் பெரிய மனிதர்களைச் சாட்சிக்கு வைத்துக் கொண்டு அந்த மோகராக்களை ரஃபீயிடம் கொடுப்பான். பிறகு அவனுடைய வீட்டுக்கு முன்னால் குண்டும் குழியும், பொந்தும் புதருமாய் இருக்கும் இடம் ஒரு விசாலமான குளமாக உருவெடுக்கும். காக்கையின் சிறகுபோல் தெளிந்த நீர் அதில் சலசலக்கும். தோண்டப்பட்ட மண் குளத்தின் நான்கு பக்கங்களிலும் மலைபோல் இருந்து கொண்டு தண்ணீரைக் கட்டிக் காக்கும். குளத்தைப் பார்ப்பவர்களுக்குக் கண் குளிர்ந்து போகும். உள்ளூர்க்காரர்களும் வெளியூர்க்காரர்களும் அந்தப் பெரிய குளத்தைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள். பணம் மிச்சப்பட்டால் இரண்டு படித்துறைகள் கட்டிவிடலாம். படித்துறைகளில் ஆலும் அரசும் வைத்துவிட்டால் எவ்வளவு களையாக இருக்கும்! அந்தப் பக்கமாகச் செல்லும் பிரயாணிகள் மரத்து நிழலில் உட்கார்ந்துகொண்டு வழிச் சாப்பாட்டைச் சாப்பிடுவார்கள், குளத்துத் தண்ணீரை இரு கைகளாலும் மொண்டு மொண்டு குடிப்பார்கள். மனிதர்கள் மட்டுமல்ல, தாகத்தால் தவிக்கும், ஆடு, மாடு, கன்றுகள்கூட அங்கே தண்ணீர் குடித்து மகிழும். சின்னஞ்சிறு பையன்கள் அதில் குதித்து நீந்தி விளையாடுவார்கள். கிராமத்துப் பெண்கள் அந்தத் தண்ணீரைக் குடங்களில் எடுத்துப் போவார்கள். வாலிபர்கள் மழைக் காலத்தில் பனங்கட்டைகளை மிதக்கவிட்டு அவற்றின் மேல் உட்கார்ந்துகொண்டு மீன் பிடிப்பார்கள்......

இந்தக் கனவு இஸ்மாயிலைப் பைத்தியமாக ஆக்கியிருந்தது. அந்தக் குளம் வெட்டி முடித்து அதை அவன் கண்ணால் பார்ப்பானா! அதைப் பார்க்க வேண்டும் என்பதுதான் அவனது வாழ்க்கையின் லட்சியமாகிவிட்டது. அதுவரையில் தன்னை உயிரோடு வைத்திருக்கும்படி அல்லாவை இறைஞ்சுவான் இஸ்மாயில். அவனுக்கு உயிருக்குயிரான ரம்ஜான், 'தாகம், தாகம்' என்று துடித்துச் செத்துப் போனான். இப்போது மூங்கில் புதருக்கடியில் ஒரு கல்லறையில் தூங்கிக் கொண்டிருக்கும் ரம்ஜானின் பெயரால் ஒரு குளம் வெட்டினால்தான் அந்தச் சிறுவனின் மரண தாகம் தணியும்.....

ஆனால் பானை இன்னும் நிறையவில்லையே ! பானை நிறைந்த பிறகுதானே குளம் வெட்ட ஏற்பாடுகளைத் தொடங்க முடியும்!

# பஜாஜ் அளிக்கும் மகத்தானதோர் சலுகை

ஒவ்வொரு டீலக்ஸ் ப்ரஷர் குக்கருடன்

பயனுள்ள ஒரு இட்டிலி தட்டு **இலவசம்!**




இப்போது நீங்கள் ஸ்பெஷல் பஜாஜ் டீலக்ஸ் ப்ரஷர் குக்கர் வாங்கும்போது இருமடங்கு மகிழ்ச்சி உங்களுக்கு கிடைக்கும். நீங்கள் கொடுக்கும் பணத்துக்கும் பன்மடங்கு பலன தரும் மிக அழகான, எடுப்பான கவர்ச்சிமிக்க ப்ரஷர் குக்கரோடு, உங்களுக்கு ஒரு பயன்தரும் இட்டிலி தட்டும் இனாமாகக் கிடைக்கிறது!




**முந்துங்கள்! 1971 நவம்பர் 15ம் தேதி முதல் 1972 ஜனவரி 15ம் தேதி வரையுள்ள இரண்டே மாதங்களுக்கு மட்டுமே இந்தச் சிறப்பான சலுகை!**

*இச் சலுகை தென்னிந்தியாவுக்கு மட்டுமே.

**பஜாஜ் எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்** 45 47 வீர நரிமன் ரோடு, பம்பாய்-1 இந்தியாவெங்கும் கிளைகள்

Hero's-BE-107 TM

ஊரில் இஸ்மாயிலைப் பற்றிய ஏச்சுப் பேச்சு பரவியது. இந்த வெட்கங்கெட்ட இஸ்மாயில் ஓர் இந்துப் பெண்ணுக்கு — அதுவும் அயோக்கியன் ஐதுராயின் பெண்ணுக்கு — அடைக்கலம் கொடுத்திருக்கிறானே....! என்ன அநியாயம்! அந்த அப்பனுக்குப் பிறந்த பெண் எந்த நோக்கத்தோடு இவனுடைய வீட்டுக்குள் நுழைந்திருக்கிறாளோ, அல்லாவுக்குத்தான் வெளிச்சம்!

ஆனால் சிலர் இஸ்மாயிலைப் பாராட்டவும் செய்தார்கள். பலே ஆள்தான் இஸ்மாயில்! அந்தப் பெண்ணை எப்படியோ மயக்கித் தன் வீட்டில் தங்கச் செய்துவிட்டானே! கொஞ்ச நாட்கள் கழிந்து 'கலமா' ஓதி அவளை மதம் மாற்றி ரஃபீயானுக்கு நிக்காஹ் செய்து வைத்துவிடப் போகிறான். அதுதான் இப்போது ரஃபீ இஸ்மாயிலைச் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறான். அதனால்தான் ரஃபீக்கு இப்போது இஸ்மாயில் சொல்வதெல்லாம் வேத வாக்கு!

ஒரு நாள் நிஜமாகவே ரஃபீயின் உறவினர்கள் இந்த விஷயமாக இஸ்மாயிலிடம் பேச வந்துவிட்டார்கள்.

''இந்த ஐதுராய் பாகிஸ்தானின் பரம விரோதியா யிருந்தான்.''

'' அதற்குப் பெண் என்ன செய்வாள்?'' இஸ்மாயில் சொன்னான்.

''தந்தையின் குற்றத்துக்குப் பெண்ணைப் பழி வாங்க வேண்டும்! அவளை இங்கிருந்து தப்பிப் போகவிடக் கூடாது! நீ 'உம்' என்று சொன்னால் போதும். ரஃபீ அவளை நிக்காஹ் பண்ணிக்கொள்ளத் தயாராக இருக்கிறான்.''

இஸ்மாயில் பதில் சொல்லவில்லை.

'' என்ன யோசிக்கிறாய்? ரம்ஜானைப் பீற்றித்தானே? பாவம், பச்சைப் பிள்ளையை எலி அடித்துக் கொல்வது போல் தடியால் அடித்துக் கொன்றார்களே, பாவிகள்!''

பிள்ளையின் மரணத்தை நினைவூட்டி அவன் மனத்தில் துவேஷத்தைக் கிளப்ப முயன்றார்கள் வந்தவர்கள்.

ஆனால் இஸ்மாயிலின் மனத்தில் நினைவுக்கு வந்தது மற்றொரு நிகழ்ச்சி. ரம்ஜான் பிறப்பதற்குப் பல வருடங்களுக்கு முன் நடந்தது அது.........

சோகம் கப்பிய ஒரு மாலை நேரம். அப்போதுதான் தாயைப் பறி கொடுத்த ஒரு சிறுமி விம்மி விம்மி அழுது கொண்டே காமரனிடம் வருகிறாள். காமரனால் அவளைத் தேற்ற முடியவில்லை. சிறுமியின் முகம் அழுது அழுது சிவந்து, வீங்கிப் போகிறது. கடைசியில் இஸ்மாயில் அந்தக் குழந்தையைத் தோளில் தூக்கிக் கொண்டு போய் ரயில் ஸ்டேஷனுக்கருகில் உள்ள மைதானத்தில் சுழலும் குடைராட்டினத்தைக் காட்டித் தேற்றுகிறான். அக்காட்சியில் தன் வருத்தத்தை மறந்து 'களுக்'கென்று சிரிக்கிறாள் சிறுமி மஞ்சு......

''உனக்குக் கொஞ்சமும் கவலை வேண்டாம், இஸ்மாயில்! நல்ல பிள்ளையாகப் பார்த்து ஒரு நாள் நிச்சயம் செய்துவிடு. ரஃபீ அந்தப் பெண்ணைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றுவான்.''

இஸ்மாயில் ஏதாவது சாக்குப்போக்கு சொல்லி அவர்களைத் தட்டிக் கழிக்கப் பார்த்தான். ''ஊருக்குப் பக்கத்தில் போலீஸ் ஸ்டேஷன். வயது வந்த பெண்ணைப் பலவந்தமாக நிக்காஹ் செய்து கொடுக்க முடியுமா? அதுவும் ரொம்பத் துணிச்சல்காரப் பெண் அவள்; பலாத்காரத்துக்குப் பணிந்து போகக்கூடியவள் அல்ல. அவள் மீறி ஓடினால் நான் என்ன செய்ய முடியும்?''

''அந்தக் கவலை உனக்கு வேண்டாம். ரஃபீயின் ஊருக்குப் பெரியவன். அவன் எல்லா விஷயங்களையும் கவனித்துக் கொள்வான்.''

சமையல் அறையில் காரியமாக இருந்த காமரனின் காதுகளில் அவர்களுடைய பேச்சு ஓரளவு விழுந்தது. அவர்களுடைய கசமுசப் பேச்சும், அவர்கள் இங்குமங்கும் திருட்டுத்தனமாகப் பார்க்கும் பார்வையும் அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. கொஞ்ச நாட்களாகச் சில வதந்திகள் பராபரியாக அவள் காதுகளிலும் விழுந்தன. காமரன் செய்வதறியாமல் துடித்துக் கொண்டிருந்தான்.... இந்த அதிர்ஷ்டங்கெட்ட பெண் எங்கே போய்விட்டாளோ...

இதோ நடு அங்கணத்தில் நிச்சிந்தையாகப் படுத்து உறங்குகிறாளே....! ராத்திரி வேளைகளில் சாப்பிடுவதில்லை அவள். கேட்டால் 'பசிக்கவில்லை' என்கிறாள். ஆனால் உண்மையில் அவளுக்குப் பசிக்காமல் இல்லை. சமைக்கச் சோம்பல், அவ்வளவுதான்! சுத்த சோம்பேறி. சரியான தூங்குமூஞ்சி.

இருந்தாலும் மனம் கேட்கவில்லை காமரனுக்கு. மஞ்சு நிஜமாகவே தூங்குகிறாளா, அல்லது தூங்குவதுபோல் பாவனை செய்து கொண்டு திண்ணையில் நடக்கும் மந்திராலோசனையை ஒட்டுக் கேட்கிறாளா?

காமரன் உள்ளே எட்டிப் பார்த்தான். விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதன் ஒளியில் நிச்சிந்தையாகப் படுத்துறங்கும் மஞ்சுவின் கள்ளங்கபடமற்ற முகம் தெரிந்தது. எவ்வித பயமோ, அவநம்பிக்கையோ இல்லாமல் ஒரு முகமதியனின் வீட்டில் தூங்கிக் கொண்டிருக்கிறாள் அந்த இந்துப் பெண். ஓர் இளவரசி தன் அரண்மனையில் ஓய்வாகத் தூங்குவது போல் காமரனுக்கு எரிச்சல்

வந்தது. என்ன அசட்டுத் தைரியம் இந்த முரட்டுப் பெண்ணுக்கு !

அந்த இரவை எப்படியோ கழித்தாள் காமரன். காலையில் கண் விழித்ததும் மஞ்சு விடம் சொன்னாள்: ''இதோ, பார் ! இங்கேயிருந்து உடனே போய்விடு. நீ யாரோ, நான் யாரோ ! நான் ஏன் உன்னைக் கட்டிக்கிட்டு மாரடிக்கணும்? நீ நடையைக்கட்டு. ஆமாம், சொல்லி விட்டேன்!''

மஞ்சு காமரனின் பேச்சைப் பொருட் படுத்தவில்லை ; ஏதோ ஹாஸ்யத்தைக் கேட்டவள் போல் கடகடவென்று சிரித்தாள்.

'' என்னடி பதிலைக் காணோம் ?''

மஞ்சு ஒரே வாக்கியத்தில் பதில் சொன்னாள்: ''நான் என் ஜனங்களை விட்டுட்டுப் போகத் தயாரில்லே.''

'' உன் ஜனங்களா ? நல்ல வேடிக்கை தான் இது ! எப்படியெல்லாம் பேசக் கத்துக் கிட்டிருக்கே நீ? நீ வேறே மதம், நாங்க வேறே மதம்! உனக்கு இடங் கொடுத்ததுக் காக இப்பவே ஊர்க்காரங்க எங்களைப் பழிக்கிறாங்க.''

'' நீங்க மத்தவங்க மாதிரி இல்லையே ; அதனால்தான் உங்ககிட்டே வந்தேன் !'' என்று சொன்ன மஞ்சு காமரனைக் கேட்டாள்: ''இன்னிக்கு உனக்கு என்ன வந்துட்டுது, அண்ணி ? என்னுங்கொன்னுமா வெடிக் கிறியே !''

'' கொஞ்சங்கூடப் பயமே இல்லையே, இந்தப் பெண்ணுக்கு ! ஏண்டியம்மா, காயஸ்தர் தெருவோ ஓடிப் போயிடுச்சு ; நீ மட்டும் என்ன தைரியத்திலே இங்கே வந் திருக்கே ?''

''என் அம்மா செத்துப் போன போது காயஸ்தர் தெருவிலே ஜனங்கள் இல்லையா? அப்போ நான் எந்த நம்பிக்கையிலே உங்க கிட்டே வந்தேன், சொல்லு ! அந்தத் தைரி யத்திலேதான் இப்பவும் வந்திருக்கேன்.''

அவளுடைய பேச்சுக்கு ஈடுகொடுக்க முடி யாமல் காமரன் அங்கிருந்து நகர்ந்தாள்.

மறு நாள் மாலை. மஞ்சு மாவு பிசைந்து ரொட்டி தட்டிக் கொடுக்க, காமரன் அவற் றைப் பொரித்துக் கொண்டிருந்தாள். மஞ்சு தன் புக்ககத்துக் கதையைச் சொல்லிக் கொண் டிருந்தாள். அவள் மைத்துனனும் ஓரகத்தி யும் அவளைப் படாதபாடுபடுத்திய வரலாறு- காரணம் சொத்துத்தான். அவளுக்குரிய பங் கைக் கொடுக்க அவர்களுக்கு விருப்பமில்லை.

காமரன் சொன்னாள்: ''அவங்க உன்னை விரட்டினதுக்குச் சொத்து மட்டும் காரண மில்லே. உன் அகம்பாவமுந்தான். சின்ன வயசிலேயிருந்து உன் துடுக்குத்தனமும், பிடிவாதமும் பழகிப் போன எனக்கே உன்னை அடிச்சு விரட்டணுமின்னு தோணுதே, மத்தவங்களுக்கு எப்படி இருக்கும்!''

மஞ்சு சிரித்துக் கொண்டே சொன்னாள்: '' அதனால்தான் உன்கிட்டே ஓடி வந்துட் டேன்.''

வாசலில் காலடிச் சத்தம் கேட்டது.

மறுபடியும் மந்திராலோசனையா? காமரன் பயத்துடன் வெளியே எட்டிப் பார்த்தாள். அவள் நினைத்தது சரிதான் ! ஊர்ப் பெரிய வர்கள் வந்துவிட்டார்கள், இஸ்மாயிலுக்குத் துர்ப்போதனை செய்ய !

காமரன் மஞ்சுவிடம் சொன்னாள்: ''உனக்கு இங்கேயும் இடமில்லே! நீ நாளைக்கே இங்கேயிருந்து போயிடு!''

மஞ்சு திகைத்துப் போய் அவளைப் பார்த் தாள்.

'' ஆமாம், நெசமாத்தான் சொல்றேன் ! நாளைப் பகல் ரயில்லே புறப்பட்டுப் போயிடு ! நீயாக் கௌம்பலேன்னு உன்னைத் தொடப்பத் தால் அடிச்சு விரட்டிப்பிடுவேன் !''

மஞ்சுவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ''அப் படியே செய், அண்ணி! உன்கிட்டே இதுவரை வாய்க்கு ருசியாத் தின்பண்டங்கள்தான் வாங்கிச் சாப்பிட்டிருக்கேன் : ஒரு தடவை கூடத் தொடப்பத்தாலே அடி வாங்கின தில்லே. அதுவுந்தான் எப்படியிருக்குன்னு பார்க்கிறேனே....! அது போகட்டும், நாளைக் காரியத்தை நாளைக்குப் பார்த்துக்கலாம். இப்போ அடுப்பைக் கவனி, அண்ணி!''

காமரன் கோபத்துடன் வாணலியைக் கீழே இறக்கி வைத்தாள். ''அடுப்பு நாசமாய்ப் போகட்டும்! நான் கேக்கறேன், உனக்கு மானம், ரோசம் ஒண்ணும் கிடையாதா ? எல்லாத்தையும் உதுத்துட்டியா ?''

அப்போது இஸ்மாயில் தன் ஹுக்காவுக்கு நெருப்பு எடுத்துக் கொள்ள அங்கே வந்தான். மஞ்சு அவனிடம் புகார் செய்தாள்: ''பார், அண்ணு! அண்ணி என்னை விரட்டுறா !''

காமரனின் கோபம் குறையவில்லை. ''ஆமாம், நிச்சயம் விரட்டத்தான் போகி றேன்! நான் வேறே மதம், நீ வேறே மதம்! தேசங்கூட இரண்டாப் போயிடுச்சு! நீ ஏன் இன்னும் இங்கே இருக்கணும் ?''

இப்போது மஞ்சுவுக்கும் கோபம் வந்து விட்டது.

''நான் எங்கே போவேன், சொல்லு ! உலகத்திலே எனக்கு யார் இருக்கிறாங்க ?... சரி, அண்ணு ! நீ என்னைக் கூட்டிப் போய் எனக்கு ஏதாவது ஏற்பாடு செஞ்சுட்டு வா! எனக்கு அந்தத் தேசத்துலே யாரைத் தெரி யும்? என்னைக் கொடுத்த இடத்திலேகூட வச்சுக்காம தொரத்திட்டாங்களே!''

அவளது கண்களிலிருந்து நீர் ஆறுகப் பெருகியது.

இஸ்மாயில் மனைவியிடம் சொன்னான்: ''மஞ்சு போற போது போகட்டும். இப்போ என்ன அவசரம்? போய் நடுத் தெருவிலே நிப்பாளா என்ன? நல்லா யோசிச்சு ஏதாவது ஏற்பாடு செய்யலாம்.''

காமரன் அவன் மேல் எரிந்து விழுந்தாள். ''ஆமா! நீ அப்படித்தான் சொல்லுவே ! எனக்கு எல்லாந் தெரியும்! அவள் நாளைக்கே இங்கேயிருந்து போயிடணும்! ஆமாம் !''

அழுவது இஸ்மாயிலுக்கு வழக்கமாகி விட்டது. நள்ளிரவில் அவனுக்கு விழிப்பு வந்துவிடும். அவன் சிறு குழந்தையைப் போல் விம்மி விம்மி அழுவான். வயதான ஆண் பிள்ளை சிறு பிள்ளையைப் போல் அழுவதற்கு நள்ளிரவுதானே சரியான நேரம் ! அவ னுடைய அழுகைக்குச் சாட்சிகள் வீடும்,

# Racold

## AUTOMATIC ELECTRIC IRON

*For effortless & safe ironing*

- Built-in thermostat designed like German thermostats for automatic heat adjustments.
- Special Heating Element affords maximum thermal contact with sole plate.
- Scientifically designed bakelite, two tone handle with pilot lamp.
- One year's guarantee against any manufacturing defects.













**REFRIGERATION & APPLIANCES CO. PVT. LTD.**

Bombay-Poona Road, Pimpri, Poona-18

9-B, Netaji Subhash Marg, Delhi-6

ga/RA/517

*DISTRIBUTORS FOR TAMIL NADU, KERALA & MYSORE*

**THE ALUMINIUM & GLASSWARE EMPORIUM**

*HEAD OFFICE:* **289, Netaji Road, Madras-1 Phone: 21776 – 21066**

*BRANCH:* **No. 3, 1st Cross, Kempegowda Extension, Bangalore-9 Phone: 26905**

# டேபிள் டென்னிஸ் வீரர் ஜகந்நாத் பிலிப்ஸ் சைக்கிள் உதவியினால் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிறார்

டேபிள் டென்னிஸ் பந்தயங்களில் ஜகந்நாத் மிகத் துடிப்புடன் விளையாடுகிறார். இந்தியாவின் தலை சிறந்த விளையாட்டு வீரர் ஜகந்நாத்துக்கு எப்பொழுதும் துடிப்புடன் இருப்பதன் அவசியம் தெரியும். தினசரி தன் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்வதன் மூலம் அவர் எப்போதும் தெம்புடன் செயல் படுகிறார். அதில் சந்தேகம் இல்லை. உலகப் புகழ்வாய்ந்த பிலிப்ஸ் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. கவர்ச்சி யானது. அனாயாசமாய் சவாரி செய்ய வல்லது. காடு முரடான சவாரிக்கும் ஈடுகொடுக்க வல்லது.

கடுமையாக உழைத்து உங்களை எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லும்.

*ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் சைக்கிள்.*



TIC/FH/6641

# பிலிப்ஸ்

இந்தியாவில் தயாரிப்போர்:
**டி ஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா**
அம்பத்தூர், சென்னை-53.

உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
பதிவுபெற்று உபயோகிப்போர்.

முற்றமும், அந்த அல்லாவுந்தான்! ரம்ஜான் இளைப்பாறும் அகசல்லறையும் ஒரு வேளை அந்த அழுகையைக் கேட்டுக் கொண்டிருக்குமோ, என்னவோ!

மறு நாள் பகலில் இஸ்மாயில் வீட்டில் இல்லை. அவனுக்கு ரஃபியின் வீட்டில் விருந்து. எப்போது அவன் வீடு திரும்புவானோ?

காமரன் ஒரு விஷயம் சொன்னால் சொன்னதுதான். அவள் கணவனுக்குத் தெரியாமல் பாக்கு விற்றுப் பத்து ரூபாய் பணம் வைத்திருந்தாள். அதை அவள் மஞ்சுவிடம் கொடுத்து ரயிலடிக்கு அனுப்பி விட்டாள்.

ரயில் வந்தது. தான் பார்த்தே அறியாத கல்கத்தா நகரத்துக்கு ஒரு டிக்கெட் வாங்கிக் கொண்டு மஞ்சு ரயிலில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். அவள் இந்து: ஆகையால் கல்கத்தாதான் அவளுடைய இடமாம்!

பிரயாணிகளின் தோற்றத்திலிருந்தே அவர்கள் எந்தப் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. முகம் உலர்ந்து, பார்வை வறண்டு, மௌனமாய் மேலே பார்த்துக் கொண்டிருப்பவர்கள், 'அந்தப் பக்க'த்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய தோற்றத்திலும் அங்க அசைவுகளிலும் கையாலாகாத் தன்மை தன்னைப் பறை சாற்றிக் கொண்டிருந்தது.

பிரயாணிகளில் மஞ்சுவுக்குத் தெரிந்தவன் ஒருவன் இருந்தான். பெயர் விபின் தாம்பூலி. முன்பு காயஸ்தத் தெருவுக்குப்பின் தெருவில் இருந்திருக்கிறான். இப்போது இந்தியாவில் வசிக்கிறான்.

சுங்க அதிகாரிகள் உள்ளே வந்து பிரயாணிகளின் உடைமைகளைச் சோதனை செய்துவிட்டு இறங்கினார்கள். ரயில் புறப்பட்டது. உலர்ந்து வறண்ட முகங்களில் இப்போது சற்று உற்சாகத்தின் அறிகுறி காணப்பட்டது. வெறும் அறிகுறிதான்; வாய் விட்டுச் சிரிக்க இன்னும் நேரம் வரவில்லை. எல்லைப் புளிய மரத்தைத் தாண்டவில்லையே இன்னும்!

ஓடத் தொடங்கிய வண்டியுடன் ஓடி வந்தான் இஸ்மாயில். வீடு வந்து விஷயத்தைக் கேள்விப்பட்டதும் ஸ்டேஷனுக்கு ஓடோடி வந்திருக்கிறான்.

அவன் துணியால் மூடப்பட்ட ஒரு பித்தளைப் பானையை ஜன்னல் வழியே மஞ்சுவிடம் கொடுத்தான். ''ரசகுல்லா வாங்கி வந்திருக்கிறேன், மஞ்சு. ராத்திரி சாப்பிடு.''

மஞ்சு அழுது கொண்டே சொன்னாள்: ''எனக்கு வேண்டாமண்ணா! உன் வீட்டிலே எனக்கு இடம் தாலேலே! ஒரு வேளைச் சாப்பாடு கொடுக்காட்டா என்ன மோசம்!''

அவள் சொன்னது அவன் காதுகளில் விழவில்லை. ரயிலின் வேகம் அதிகமாகி விட்டது. அவன் பின்தங்கிவிட்டான். மஞ்சு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். பிளாட்பாரத்தின் ஓரத்தில் அவன் ரயிலைப் பார்த்துக் கொண்டு சிலையாக நிற்பது தெரிந்தது.

விபின் மஞ்சுவைக் கேட்டான்: ''இஸ்மாயில் உன்கிட்டே என்ன கொடுத்தான்?''

''சாப்பிடப் பட்சணம்.''

குலுங்கக் குலுங்கச் சிரித்தான் விபின். ''நீ இதுவரை எப்படியோ இருந்துட்டே. போனது போகட்டும். இனிமேலாவது அவங்க சங்காத்தத்தை விட்டுவிடு! இஸ்மாயில் கொடுத்த பட்சணத்தைத் தொடாதே! அவன் சுத்த அயோக்கியன். 'பாகிஸ்தான், பாகிஸ்தான்'னு கத்திக்கிட்டிருந்தான். அவன் மாதிரி ஆளுங்கதான் இந்துக்களைக் கொல்றாங்க, வீட்டுக்கு நெருப்பு வைக்கிறாங்க..... அந்தத் துரோகி பட்சணத்திலே விஷம்கூட வச்சிருப்பான். அதை அப்படியே வெளியிலே எறிஞ்சிடு!''

மஞ்சு சொன்னாள்: ''எப்படி இருந்தவங்க இப்போ எப்படி ஆயிட்டாங்க!''

ரயில் புளிய மரத்தைத் தாண்டியதும் பிரயாணிகளின் முகத் தோற்றம் சட்டென்று மாறியது. கூனிக் குறுகி உட்கார்ந்திருந்தவர்கள் இப்போது தலை நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு 'ஜெய் ஹிந்த்!' என்று கோஷித்தார்கள்.

மஞ்சு பானையைத் திறந்து பார்த்தாள். ரசகுல்லா எங்கே? மேலே இருந்தது முதல் நாள் பொரித்த பூரியும் எள்ளுருண்டையும் தான்! சீ! இதையா அவன் சாப்பிடுவான்! இதைப் போய் ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்து கொடுத்து அவளை அவமானப்படுத்தியிருக்கிறானே இஸ்மாயில்!.... இன்னும் என்ன இதில்? ஏன் இவ்வளவு கனக்கிறது பானை? பளபளவென்று இதென்ன!..... மோகராக்கள்! ஒன்றல்ல, இரண்டல்ல!.... பூரிக்கும் எள்ளுருண்டைக்கும் அடியில் பானை நிறைய மோகராக்கள்!

இஸ்மாயில் அண்ணா அவளுக்கு ஒருவேளை சாப்பாடு மட்டும் தரவில்லை. அடியோடான அவள் புதிய ஊரில் பட்டினி கிடக்காமல் வாழ ஏற்பாடு செய்துவிட்டான்!

---

# பாலுசேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"விஷ்ணுவிகார்", 17-A, பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அடுத்தது,
சயான் (கிழக்கு), பம்பாய்-22. D.D.
போன்: 47 14 55 தபால்பெட்டி: 6759 • தந்தி: 'GROWRICH'

உன்னத சேவையில் 25-வது ஆண்டு ஆரம்பம்
ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள நீண்ட
1971 டிசம்பர் மாதம் புதிய குரூப்புகள்

**குறுகிய காலம்: 25 மாதங்கள்**

சேருவதற்கு கடைசி தேதி: 11-12-1971
முதல் ஏலத் தேதி: 12-12-1971

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- |
| C | 50/- | 1,250/- |
| F | 25/- | 625/- |
| G | 20/- | 500/- |

**நீண்ட காலம்: 40 மாதங்கள்**

சேருவதற்குகடைசிதேதி: 24-12-1971
முதல் ஏலத் தேதி: 26-12-1971

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| E | 500/- | 20,000/- |
| F | 250/- | 10,000/- |
| G | 125/- | 5,000/- |

நீண்ட காலம்: 50 மாதங்கள்—ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி: 18-12-1971 :: முதல் ஏலத் தேதி: 19-12-1971

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை: மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை - திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
" பாலுசேரி பில்டிங்ஸ் "
3, செங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி: 414, சென்னை - 5
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி
இலவச பிரகடனத்திற்கு எழுதுங்கள்:

சீட்டுகள் ஒதுக்குதல்
கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது




## எமது வெள்ளி விழா ஆண்டு

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை



★ குதிரைக்கு லாடம் அடிப்பது பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். ருஷ்யாவில் வாத்துக்கள் செருப்புப் போட்டுக் கொள்ளும். தரையில் பல மைல்கள் நடக்கவேண்டிய சமயம் - நீரில் நீந்துவதற்கும் படைக்கப்பட்ட - அவற்றின் பாதங்கள் விறைத்து நடு வழியிலேயே பல வாத்துக்கள் இறந்து போகும். இதைத் தடுக்க உருகிய தாரைத் தரையில் ஊற்றி அதன் பேரில் வாத்துக்களை நடக்கச்செய்து உடனடியாக மணற் பரப்புக்கு விரட்டுவார்கள். மணல் பாதங்களில் ஒட்டிக் கொண்டு ஒரு தடுப்பாகப் பயன்படும். லாடம் போன்று அமைந்து காப்பாற்றும். -- தேஜ்

## உத்தரவின்றி விளையாடாதே!



★ ஒரு விளையாட்டுக்கு எப்போதாவது அரசாங்கம் தடை செய்தது உண்டா? உண்டு! இரண்டாம் எட்வர்ட் மன்னர் கால்பந்து விளையாட்டுக்கு மிகக் கடுமையான தடை விதித்திருந்தார்! காரணம் இளைஞர்கள் இவ்விளையாட்டில் அதிகமாக ஈடுபட்டு விட்டதால் நாட்டில் வில்வித்தை கற்றுக் கொள்பவர்கள் குறைந்துவிடவே அவருக்குத் தேசப் பாதுகாப்பைப் பற்றியே பயம் வந்துவிட்டது!



★ ஐரோப்பிய மலைவாச ஸ்தலங்களில் உடற் பயிற்சிக்காகவும் பொழுது போக்குக்காகவுமே முதலில் பனி மீது ஹாக்கி விளையாட்டைத் தொடங்கினார்கள். பிறகுதான் இதை மண்ணிலும் விளையாடும் எண்ணம் உதித்து முயன்று வெற்றி பெற்று, பிரபலமாக்கினார்கள்!

★ கூடைப் பந்து விளையாட்டு 1891ம் ஆண்டு தான் கண்டுபிடிக்கப்பட்டது. அமெரிக்க டாக்டரான ஜேம்ஸ் நைஸ்மித் என்பவர்தான் அதை உருவாக்கினார். 'இன்டோர்கேம்' ஆக. அவருடைய கல்லூரி மாணவர்கள் மழைத் தண்ணீர்த் தேக்கத்தால் கால்பந்து விளையாட முடியாமல் தவித்து நின்றபோது தான் கட்டடத்துக்குள்ளேயே விளையாடலாமே என்று அவர் கூடைப் பந்தாட்டத்தைப் பிரயாசைப்பட்டு யோசித்துக் கண்டுபிடித்தார். - முரளி





★ திருட்டுப் போய் விட்டது என்று இன்னதைத் தான் கூறலாம் என்பதில்லை. மேல்நாடுகளில் எதுவும் திருட்டுப் போகும்!

இரவோடு இரவாக, ஒரு சிறு ஓடையின் கரைகளை இணைத்த சுமார் ஐந்து டன்னுக்கு மேல் எடையுள்ள ஒரு ரயில் பாலமே கூட இத்தாலியில் திருட்டுப் போய் விட்டதாம். அதை எடுத்துக் கொண்டு போய் அவர்கள் என்ன செய்தார்கள் என்பது இன்னும் மர்மமாகவே உள்ளது! - தழல்



★ ஒரு பிரமுகர் எதற்கெடுத்தாலும் நமது சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் இல்லாதது ஒன்றும் இல்லை என்று எப்படியாவது பேசி விடுவார். விமானத்தைப் பற்றிச் சொன்னால் புஷ்பக விமானத்தைப் பற்றிப் பேசுவார். மூளை சிகிச்சை என்றால் சரகரைப் பற்றி விவரிப்பார்.

அவருக்கு உடம்பு சரியில்லை. டாக்டரிடம் சென்றார். டாக்டர் அவரிடம், ''உங்களுக்கு ஒன்றும் இல்லை. தினமும் காலையிலும் மாலையிலும் கடற்கரையில் இரண்டு மைல் ''வாக்கிங்'' போனால் மனத்துக்கு நிம்மதி இருக்கும். உடம்பும் தேறிவிடும்'' என்றார்.

உடனே பிரமுகர், ''என்ன டாக்டர், நீங்கள் சொல்வது ஒன்றும் புதிது இல்லையே? அந்த நாளிலேயே இதைச் சொல்லியிருக்கிறார்களே! '' 'வாக்'குண்டாம் நல்ல மனமுண்டாம்' என்று. கேள்விப்பட்டதில்லையா?'' என்றார்.

- எஸ். பி. மணி

# வீடு வேண்டுமா?

நாடோடி

குடியிருக்க வீடு இல்லையே என்று தவிக்கிறவர்களைப் பார்க்கும்போது எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. வீடு இல்லாமல் தவிக்கிறார்களே என்கிற பரிதாபம் அல்ல, ''இப்படியும் அசடுகள் இருக்குமா?'' என்கிற பரிதாபம்தான்.

பழைய காலத்தில்தான் நமக்குப் பிடித்த வீடு வேண்டுமானால், அந்த வீட்டில் குடியிருப்பவர் எப்பொழுது காலி பண்ணுகிறார் என்று காத்துக் கொண்டிருக்க வேண்டும், பிறகு அவர் காலி பண்ணுகிறார் என்று தெரிந்ததும், வீட்டுக்காரரிடம் போய், ''ஆறு மாத வாடகை முன் பணமாகத் தருகிறேன். ஐயாயிரம் ரூபாய் ரகசியப் பணமாகத் தருகிறேன்'' என்றெல்லாம் சொல்ல வேண்டும். இதற்கு ஆசைப்பட்டு வீட்டுக்காரர் வீடு தருகிறேன் என்று சொன்னாலும், வீடு நமக்குக் கிடைக்கும் என்ற நிச்சயம் கிடையாது. இதற்கிடையில் குடியிருப்புக் கட்டுப்பாட்டு அதிகாரி அந்த வீட்டை அவர் விருப்பப்பட்ட வேறு யாருக்காவது கொடுத்துவிடலாம்.

ஆனால் இதெல்லாம் பழைய காலம். இப்பொழுதோ, உங்களுக்குக் குடியிருக்க வீடு வேண்டுமானால் நீங்கள் இப்படியெல்லாம் கஷ்டப்பட வேண்டாம். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இரண்டு, மூன்று ரூபாய் செலவில் உங்கள் பெயர்ப் பலகை ஒன்று தயார் செய்துகொள்ள வேண்டும். இப்பொழுது தான் பிளாஸ்டிக் எழுத்துக்களில் அழகான பெயர்ப் பலகைகள் கிடைக்கின்றனவே, அது ஒன்று தயார் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். அதைக் கையில் எடுத்துக்கொண்டு எந்தப் பேட்டையில் உங்களுக்கு வீடு வேண்டும் என்று தோன்றுகிறதோ, அந்தப் பேட்டையில் உள்ள வீடுகளைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வர வேண்டும். எந்த வீடு உங்களுக்குப் பிடிக்கிறதோ, அந்த வீட்டின் முன்னால் பொருத்தப்பட்டிருக்கும் பெயர்ப் பலகையை எடுத்து விட்டு, உங்கள் பெயர்ப் பலகையை மாட்ட வேண்டும். அவ்வளவுதான். அந்த வீடு உங்களுடையது!



என்ன நினைக்கிறீர்கள்? நான் தமாஷ் பண்ணுகிறேன் என்று நினைக்கிறீர்களா? அப்படி நினைக்காதீர்கள். உங்களுக்குச் சந்தேகமாக இருந்தால் இந்திரா காங்கிரஸைச் சேர்ந்த டாக்டர் ஷர்மாவையும், ஸ்ரீ யாதவையும், அவர்கள் டில்லி ஜந்தர்மந்தர் சாலையில் உள்ள பழைய காங்கிரஸ் காரியாலயத்தை எப்படிக் கைப்பற்றினார்கள் என்று கேளுங்கள். இந்த மாதிரி, தங்கள் பெயர்ப் பலகைகளைக் கையோடு எடுத்துக் கொண்டு போய்த்தான், அங்குள்ள பழைய பெயர்ப் பலகைகளை நீக்கிவிட்டு, தங்கள் பெயர்ப் பலகைகளை மாட்டினார்கள்.

பெயர்ப் பலகைகளை மாற்றும் முறை சரி என்று அங்கீகரிக்கப்படுமானால் எல்லாருக்கும் எத்தனை சௌகரியம்!

சமீபத்தில் ரயில்வே போர்டுத் தலைவர் இரு காங்குலியைப் பதவியை விட்டு



விலக்க என்னவெல்லாம் கஷ்டப்பட்டார்கள்! கடைசியில் ஜனாதிபதி உத்தரவு போட்டு, அவரை முன்கூட்டியே பதவியிலிருந்து ஓய்வு பெறுமாறு கட்டளையிட வேண்டி வந்தது!

பெயர்ப் பலகை மாற்றும் மூலம் இந்தக் காரியத்தை எளிதில் செய்து முடித்திருக்கலாம் என்கிற யோசனை அப்பொழுது ஏன் யாருக்கும் தோன்றவில்லை? இப்படிச் செய்திருந்தால் என்ன நடந்திருக்கும்? ஒரு நாள் காலை இரு காங்குலி தம் காரியாலயத்துக்குள் நுழைந்து, தம் அறையை நோக்கிச் செல்வார். அவர் அறைக்கு முன்னால் போடப்பட்டிருந்த அவருடைய பெயர்ப் பலகை நீக்கப்பட்டு, இன்னொருவருடைய பெயர்ப் பலகை அங்கு இருக்கும். உடனே இரு காங்குலி ஒன்றும் புரியாமல் வீடு திரும்பி விடுவார்.

வேலையில்லாமல் எத்தனை பேர் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்! அவர்கள் இந்த வழியில் தங்களுக்கு வேண்டிய வேலையை எளிதில் சம்பாதித்துக் கொள்



லாம்! அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு பெயர்ப் பலகை தயாராக வைத்துக் கொள்ள வேண்டியது. தங்களுக்கு எந்தக் காரியாலயத்தில், யாருடைய வேலை வேண்டும் என்று தோன்றுகிறதோ, அவர்களுடைய பெயர்ப் பலகையை எடுத்துவிட்டுத் தங்கள் பெயர்ப் பலகையை மாட்ட வேண்டியது; அவ்வளவு தான். ஆனால் இதற்குமுன் ஒரு சட்டம் வர வேண்டும். நாட்டிலுள்ள எல்லாருக்கும் ஆளுக்கு இரண்டு பெயர்ப் பலகைகள் வைத்துக் கொள்ள வேண்டும், ஒன்றை வீட்டுக்கு முன்னால் மாட்டி வைக்க வேண்டும், இன்னொன்றைத் தங்கள் காரியாலயத்தில் மாட்டி வைக்க வேண்டும் என்று சட்டம் வரவேண்டும். அப்பொழுதுதான் பெயர்ப் பலகைகளை மாற்றும் காரியத்தை நாம் எளிதில் நிறைவேற்ற முடியும்.

என்னைக் கேட்டால், பெயர்ப் பலகைகள் உபயோகிக்க முடியாத இடத்தில் பெயர் மாற்றும் செய்தால் போதும் என்று வைத்துவிடலாம். அப்பொழுது எத்தனையோ காரியங்களைப் பலர் வெகு எளிதில் சாதிப்பார்கள்.

ரயிலில் இடம் கிடைக்கவில்லையென்று வைத்துக் கொள்ளுங்கள். கவலை வேண்டாம். ரயில் பெட்டியின் வெளியில் யார் யாருக்கு இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று ஓர் அட்டவணை ஒட்டுகிறார்களே, அதில் யார் பெயரையாவது அடித்து நம் பெயரை எழுதி விட வேண்டியது.

அதே மாதிரி பரீட்சையில் யார் யார் தேறினார்கள் என்று ஜாபிதா வெளியிடுகிறார்களே, அதில் பரீட்சையில் தேறாதவர்கள், யார் பெயரையாவது அடித்துத் தங்கள் பெயரை எழுதிக் கொள்ளலாம்.

பெயர்ப் பலகை மாற்ற முறையோ, அல்லது பெயர் மாற்ற முறையோ அமலுக்கு வந்தால், நாட்டில் தேர்தல்கள் கூட நடத்த வேண்டியதில்லை. வெகு நாட்களாக இந்த நாட்டின் பிரதம மந்திரியாக வர வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கும் நான், இந்திரா காந்தியின் காரியாலய அறைக்கு முன்னால் உள்ள அவர் பெயர்ப் பலகையை எடுத்துவிட்டு, என் பெயர்ப் பலகையை மாட்ட வேண்டியதுதான். எப்படி யோசனை?

# நாவலுலகில் தனித்தன்மை

'அலையோசை'யின் மூலம் நாவலுலகில் ஒரு தனித் தன்மையை நிலைநாட்டிக் கொண்டவர் நாம் கல்கி. சாதாரணமாக எந்த நாவலை எடுத்துக் கொண்டாலும், அதில் கதாநாயகி, கதாநாயகன், 'வில்லன்' அல்லது 'வில்லி' என்கிறவிதமாகக் கதாபாத்திரங்கள் அமைத்திருப்பார்கள். இந்த அடிப்படை ஒற்றுமை காரணமாகத்தான் பல நாவல்களைப் படிக்கும் போது, 'இதே போல முன்பு எங்கோ எப்போதோ படித்திருக்கிறோம் போலிருக்கிறதே' என்கிற நினைப்பு உண்டாவது இயல்பு. 'எடர்னல் ட்ரயாங்கிள்' என்பதாக ஆங்கிலத்தில் குறிப்பிடப்படுகின்ற இந்த முக்கோணத்தைத் தகர்த்தெறிந்துவிட்டுப் புதுப் பாணியிலே அலையோசையை உருவாக்கினார் கல்கி அவர்கள். ஒவ்வொரு மனித னிடத்திலும் அடிப்படையான சில குண விசேஷங்கள் இருந்தபோதிலும் சந்தர்ப்பச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப ஒருவனது ஒவ்வோர் இயல்பு ஒவ்வொரு சமயத்தில் வெற்றிபெற்று, மற்றவற்றை உள்ளடக்கிக் கொண்டு விசுவரூபமெடுக்கிறது. இதைக் கருத்தில் கொண்டு தயாரான நாவல் 'அலை ஓசை' எனலாம். ஆகவேதான் இந்நாவலில் வருகின்ற மூன்று பெண்களில் கதாநாயகி யார் என்று கண்டு பிடிப்பதே கடினமாகிறது. கதாநாயகன் வில்லனாகவும் தோன்றுகிறான், நமக்குப் பல இடங்களில். 'ரியலிஸ'த்துக்கு (Realism) முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்ட அவரது முதல் நாவல் இது எனலாம். இதிலேயே 'ஐடியலிஸ்டிக்' (Idealistic) பின்னணியாகச் சுதந்திரப் போராட்டத்தின் முக்கியமான நிகழ்ச்சிகள் பல இடம் பெற்றன. தாம் எழுதியவற்றில் எல்லாம் மிகச் சிறந்ததெனக் கல்கி அவர்களே கருதும் 'அலை ஓசை' சாகித்திய அகாடமியின் பரிசைப் பெற்றதில் அதிசயமில்லை. உப ஜனாதிபதி ராதாகிருஷ்ணனிடமிருந்து அப்பரிசைப் பெறுகின்ற கடமை என்னைச் சார்ந்தது - பரிசு அறிவிக்கப்பட்ட போது கல்கி அவர்கள் உயிர் வாழ்ந்திருக்கவில்லை.

— 'தமிழா! பெருமைப்படு' - கி. ராஜேந்திரன் தம் தந்தையைப் பற்றி ஆனந்த விகடன் 8-9-63 இதழில் எழுதிய கட்டுரையிலிருந்து ஒரு பகுதி.




சென்ற அக்டோபர் 11ந் தேதி தினமணி செய்தித் தாளில் விருதுநகர் திரு ரெ. தெ.பெ. சுப்ரமணியம் அவர்கள் தமக்குத் தமிழக அரசிடமிருந்து கிடைக்கும் தியாகிகளுக்கான உதவித் தொகையை நவம்பர் மாதத்திலிருந்து தேவையில்லை என மறுத்துத் தமிழக முதல்வர் திரு கருணாநிதிக்குக் கடிதம் வரைந்துள்ளதைப் பார்வையிட்டு உண்மையான காந்தி சீடர் ஒருவர் இருக்கிறார் என்பதை உணர்ந்து உளமகிழ்ந்தேன். இவ்வாறு அந்தியாகி மறுத்துள்ளதற்குக் காரணம் தமிழக அரசு மதுவிலக்கை ரத்து செய்ததை ஆட்சேபித்தே ஆகும்.

குளத்தூர்,
7–11–71 கே.கே. நயினாமலைக் கவுண்டர்

தமிழ்க் கல்லூரியில் பயிலுகின்ற மாணவர்களில் ஒருவன் நான். மத்திய அரசிடமிருந்து உதவித் தொகை பெற்று வந்தேன். இந்த ஆண்டிலும் அதை நம்பி உணவு விடுதியில் சேர்ந்தேன். ஆகஸ்ட் மாதத்தில் வரவேண்டிய உதவித் தொகை இன்னும் வரவில்லை. இவ்வளவு காலமாகியும் ஏன் வரவில்லை என்று மத்திய அரசு உதவித் தொகை பெறும் மாணவர்கள் வழி தெரியாது கலங்கி நிற்கின்றனர். உதவித் தொகையையே நம்பி வாழ்கின்ற ஏழை மாணவர்களை அரசாங்கம் இவ்வாறு கஷ்டப்படுத்தலாமா?

மயிலம்,
6–11–71 ந. ஸ்ரீதரன்

□ 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ரூபாய்க்கு மூன்று படி அரிசி போடுவோம்' என்று கூறி ஆட்சிக்கு வந்தனர். ஆனால் ரேஷனில் அரிசி படி ரூபாய் ஒன்றுக்குப் போட ஏற்பாடு செய்தனர். அதையும் எல்லோரும் வாங்கக் கூடாதென்பதற்காக 'ரேஷன்' என்ற போர்வையைப் போர்த்தி ரூபாய் 300க்குள் மாத வருமானம் உள்ள குடும்பத்துக்குத்தான் என்றனர். அரிசியைப் பாலிஷ் பண்ணினால்தான் சாப்பிட முடியும் என்ற அளவில் அதன் தரம் இருக்கிறது. முன்பு ஒருவருக்கு ஒரு வாரத்துக்கு 1.4 கிலோ கொடுக்கப்பட்டது. பின்னர் இந்த அளவு குறைந்து சென்ற வாரம் (15, நவம்பர்) வரை 0.8 கிலோ தான் கொடுக்கப்பட்டது. நவம்பர் 16 முதல் இது 0.6 கிலோவாகச் 'சீரமைக்க'ப்பட்டுள்ளது!

வாரத்துக்கு 600 கிராம் அரிசி வாங்கி, அதைப் பாலிஷ் பண்ணி மிச்சம் இருக்கும் 500 கிராம் அரிசியில் ஒரு மனிதன் ஒரு வாரம் ஜீவித்திருக்குமாறு அரசு ஆணையிடுகிறது. வாய்க்கும் வயிற்றுக்கும் பற்றாமல் எதற்காக இந்தப் படியரிசித் திட்டம்?

சென்னை–5
18–11–71 ம. இராமச்சந்திரன்

□ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

இந்த ஆண்டு மாயூரம் தேசிய உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர், கொரநாடு முனிசிபல் உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர், மாயூரம் வட்டத்தில் உள்ள சோனிகவரா உயர்தர ஆரம்பப் பாடசாலை தலைமை ஆசிரியர் இம்மூவருக்கும் – தமிழக அரசு விருது கிடைத்தது பெரிய கௌரவம். அதைவிடத் தகுதி அறிந்து விருது அளித்த தமிழக அரசுக்குக் கௌரவம். ''ஆயிரமானாலும் மாயூரம் ஆகாது'' என்ற பெருமையை மீண்டும் நிலைநாட்டினார்கள், இம்மூவரும். 'கல்கி' பிறந்த மாயூரம் வட்டத்தைச் சேர்ந்த இவர்களை நீங்கள் வாழ்த்த வேண்டாமா?

மணல்மேடு
19–11–71 நடராஜன்

(அன்பர் நடராஜனுடன் சேர்ந்து கல்கி நேயர்கள் சார்பில் நாமும் நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். — ஆ-ர்)

பல்கலைக் கழக ஆசிரியர் சங்கத்தின் வெள்ளிவிழா பற்றித் தங்கள் பத்திரிகையில் எழுதியதற்கு எங்கள் நன்றி. அக்கட்டுரையில் ஒரு சிறு திருத்தம் சுட்டிக் காட்டக் கடமைப்பட்டுள்ளோம். ''தனியார் கல்லூரிகளில் பணியாற்றும் ஆசிரியர்களுக்குப் பாடம் போதிப்பதில் உள்ள அளவு சிரத்தை அரசினர் கல்லூரி ஆசிரியர்களிடம் இல்லை'' என்று நாங்கள் சொன்னதாகப் பொருள்பட எழுதியிருக்கிறது. இவ்வாறு நாங்கள் சொல்லவில்லை. ''சர்க்கார் அளிக்கும் ஊதிய அனுகூலங்கள் உடனடியாக அரசினர் கல்லூரி ஆசிரியர்களுக்குக் கிடைப்பதால் அவர்களுக்குப் பல்கலைக் கழக ஆசிரியர் சங்கத்திடம் தனியார் கல்லூரி ஆசிரியர்கள் கொண்டுள்ள அளவு ஈடுபாடு, சிரத்தை இல்லை'' என்றுதான் கூறப்பட்டது.

சென்னை – 61 ராஜகோபாலன்
21–11–71 (செயலாளர்)

வங்க தேச அகதிகள் பிரச்னை காரணமாக கவர், பதிவுத் தபால்கள், பத்திரிகைகள் மீது வரி போட்டதை மக்கள் ஒரு பொருட்டாகக் கருதவில்லை. ஆனால் இன்று பாராளுமன்றத்தில் நிதி இலாக்காவின் துணை மந்திரி திரு கே. ஆர். கணேஷ், வருமான வரி கட்டாதவர்களின் பெயர்களை வெளியிட்டு, கோடிக் கணக்கான ரூபாய்கள் வர வேண்டும் என்று கூறியிருப்பது வெட்கப்படத் தக்கதாகும். வர வேண்டிய வருமானத்தை வசூலிக்க வகையில்லாமல், புதிய வரிகளை – அன்றாட வாழ்வையே சரிவர நடத்த முடியாத ஏழை மக்களின் மீது சுமத்தி, பல இன்னல்களை உண்டாக்கியிருப்பது நியாயமா?

சென்னை-17
17–11–71 கருணைக் கதிரவன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

